குயிலெனுமொழியினர்கூறினர்பல்லாண்
டியல்புறவரிதிருமணமுடனிலக. 257

சங்கமொலித்தன தாரைகள்சின்ன
மெங்குமொலித்தனபேரியிரட்டல்
பொங்கினகுரைகடலோடுபொருந்த
வெங்கயமொததொளிர்வீரர்களார்த்தார். 258

விண்ணவரார்த்தனர்மெய்நெறியார்தத
மண்ணவரார்ததனர்மாமறையோதும்
புண்ணியரார்ததனர்போர்மகளாகும்
பெண்ணினளார்த்தனள்பேரறமார்தத. 259

தாளமெறிந்தனசாகரமேகத
திரள்களபொழிந்தனசெம்பொனின்மாரி
யுருளவுதைந்துரலோடுதவழ்ந்தே
யருளரிமாமலரன்னமொடெயத. 260

நாரதன்சுகனான்மறைசெய்தோன்
வாரிதிபருகினர்பிருகுவசிட்டன்
பாருதிதிருவொடுபரமன்வணங்கச
சீருதிமறைமொழிசெப்பினர்மகிழ்வால். 261

அன்னமெனுந்திருவோடரிதானு
மன்னவனல்வசுதேவன்மலர்த்தாள்
சொன்னமலர்த்தரை தூவிவணங்கத்
தன்னிருகைகொடுதழுவினன்மகனை. 262

சக்கரமோடியர்சங்கமுமேந்தி
நக்கர்கரப்பலிவீழ்ததிடுநல்லோ
னிக்கிரதச்சொலினொடிறைஞ்ச
வுக்கிரசேனனுரைத்தனனாசி. 263

இந்திரைசுந்தரியேழுலகீனற
கந்தமலர்க்கமலாசனியோடு
மைந்தனெனுந்திருமாலும்வணங்க
நந்தனணைததனனன்மகனென்றே. 264

கலாரமணிந்தருளிக்கமலத்தே
யுலாவியமாமயிலோடிழையெய்த
விலானும்வணங்கிடவேமகிழ்வெய்தி
யலாயுதமுன்னவனாகமணைத்தான். 165

கோவியர்கூறைகொள்கோவலனுந்தன்
றேவிதன்னோடெதிர்சென்று வணங்க
வாவலின்மார்பிணைததனளன்பாற்
றேவகியாகியவன்னைசிறந்தே. 266

கராவைமுனிந்துகரிக்கருள்செய்தே
யராவணைவைகியவசுதர்தாமுஞ்
சரோருகமின்றொடுதாளினிறைஞ்ச
வுரோகிணிமார்பினணைத்தனளுற்றே. 267

முராரியுமுண்டகமின்னுடனேதா
னிரேவதிதாளினிறைஞ்சிடவினபுற
றராவணையார்க்குயராசிபகர்ந்து
குராவருகுழல்பிறழ்கொம்பையணைத்தாள். 268

விசாலமுடைக்கமலத்தெழுமின்னு
நிசாசரர்மாளவெயநேமியர்தாமு
மசோதைதன்னடியினிறைஞ்சவணைத்தாள்
பிசாசுயிருண்டருளும்பெரியோனை. 269

நந்தர்குலத்துள்வளர்ந்தருணல்லோ
னிந்திரைதன்றொடுமெய்திவணங்கச
சிந்தைமகிழ்ந்துதிருக்கைகளாரக்
குந்தியணைத்தனளாசிகள்கூறி. 270

மருவமர்குழலிதன்மணமதுமேவி
யருகுறுமரிதனையன்புடனாத
தருமனைக்கவிறைஞ்சினர்தாளிற்
பெருநலனெய்தியபின்னவர்தாமே. 271

அந்தணராசிபகர்ந்திடவாயர்
வந்தனர்மாதர்களோடுமகிழ்ந்தே
இந்திரைதன்னுடனேமணமெய்தும்
சுந்தரனைத்தொழுதேதுதிசெய்தார். 272

அனமெனமலர்மிசையமர்பவளரியா
மனனொடுதிகழ்வுறுமணமதுமகிழவோ
ரினமலியரசர்கள்பெரிதினிதுறவே
தினமெனவருபகல்செலவுறுநாளின். 273

திருந்தவளர்த்தனன்சேடமனோமங
கருங்கடனேர்விழியார்கலைகொண்டே
குருந்துறுவோன்கமலத்துயர்கொம்போ
டருந்துதிகண்டுமகிழ்ந்தனனன்பால். 274

மற்றுநெய்யாகுதியால்வருசெய்கை
முற்றமுடித்தருள்கர்க்கனைமுந்தி
விற்றொழின்மாதவன்மெல்லியறன்னோ
டெற்றுவணங்கவுரைத்தனனாசி. 275

ஆடினனாரதனந்தணர்நூலே
பாடினர்வானுறைவோர்கள்பரிந்தே

யேடவிழ்மாமலரெண்டிசைதோறு
மூடினர்துந்துமிபேரிமுழங்க. 276

வெண்ணெயுண்வித்தகநீதிருமேவி
மண்மகள்பாரமகற்றுதிவாழ்கென
வெண்ணியன்னவிபுதர்க்கிறைமாலாம்
புண்ணியனைத்துதிசெய்தனர்போனார். 277

நிகரிலையெனவுயர்சசியொளிர்நிலவை
யிகழ்நகையொளிர்திருமருமகளெனவு
முகமொருகணமெனவுரகணைதுயில்வோன்
மகனெனமகிழ்வுறுமனன்வசுதேவன். 278

அண்டர்கடுதிசெயவேயொளிரப்பொற்
குண்டிகைதண்டமர்குடையொடுகோதி
லெண்டவர்மகிழ்வுறவுதவினனியல்பாண்
மண்டலமெனவருபேர்வசுதேவன். 279

நிறைகலனணிதுகில்செநெல்விளைவயலான்
கறவைகள்கரிபரிகனகமோடெவையும்
பொறையுடனறநெறியறிபவர்புகலு
மறையினரினிதுறவருளினன்மகிழ்வால். 280

கரிபரிரதமொடுகவிகைகள்சிவிகை
விரிகதிரொளிநவமணிகலன்விதரு
மரசர்களமகிழ்வுறவருளினனறிவாம்
வரிசையினுயர்பலவனதுகுலமகிபன். 281

தருமனொடெழிலுறுசமிரணன்மகனு
மருளொளிவிசையனுமிருவருமகிழ
வுருளெழிலிரதமொடுயர்கரிபரியு
மருளினனிருளகல்கலனொடுமெறிவான். 282

வேறு.

கந்தரத்தொளிர்கலன்களுங்கதிர்மணிக்குழுவுஞ்
சந்திரற்கொளியுதவுறுந்தரளமாமணியு
நந்தகோபனும்விருப்புறவளித்தனனலத்தாற்
சிந்தையேமகிழ்ந்தருளியதேவகிகணவன். 283

மற்றுமாயர்கடனக்குமம்மடந்தைமார்திரட்குஞ்
சுற்றுநற்றுகில்சுடர்மணிக்கலன்களுந்துலங்க
நற்றினார்களுக்கன்னதேயளித்தனனலத்தாற்
கொற்றவன்வசுதேவனுமருணிறைகுணத்தோன். 284

தரளமாமணிக்கலன்களுந்துகில்களுந்தவத்தோர்
திரள்கடேவியர்தமக்குமெய்வசிட்டதேவியர்க்கு

மரசாமாதாகளனைவாககும்சாதைககுமளித்தாள்
குரவைகோர்த்தருள்புனிதனைப்பெற்றநற்கொடியே. 285

இறைதவிர்ந்திடவேழிரண்டாண்டுபோரெனவார்
பறையறைந்தனனவமணிததிரலொளிர்பசும்பொன்
னுறைதிறந்திரவலர்களுககளித்தனனறிவே
நிறையுமுக்கிரசேனனுந்தரணியாணிருபன். 286

அவனிமீதரிதிருவோடுமெணம்புணர்நதருளுந்
தவமுமெய்தினமெனததராளதொடுமெணிபொன்
னுவரிசூழகிலத்துளவிரவலர்க்குதவுந
துவரைமாபதியோர்களிப்பினைசசொலவரிதே. 287

பஙகயத்தமரனமொடுபரம்பொருளவனி
தஙகியுத்தமன்மணம்புணர்நதுயர்நதெழுஞ்சதுரா
லெங்குமுற்றவேழுலகவருவகையுமெயதத
தஙகள்செய்க்குறநன்னலமாமெனத்தழைத்தார். 288

இன்னதோர்நலனுலகமோரேழினுமெய்தத
துன்னுநற்கமலததினிற்றோன்றியேதுலஙகும்
பொன்னினொளோடும்புணரியினமர்நதருள்புநிதன்
மன்னனல்வசுதேவனற்குமரனுண்மகிழ்நதே. 289

பொன்னினன்கலத்தறுசுவையமிர்தமும்பொருந்து
முன்னமன்னமோடருநதியேயமரர்கள்பெருமான்
றன்னுநன்மணங்கமழ்பனிநீரினாற்றலங்கு
மின்னெனும்மருஙகுடைததிருவொடுகரம்விளக்கி. 290

குங்குமம்பனிநீரினாற்கருப்புரஙகுழைத்தே
தஙகுநண்மணசசநதனமணிநதுதண்மலரும்
பஙகயத்தவள்கருஙகுழற்சூட்டினன்பரம
னெஙகணுயகனயனொடெவ்வுலகமுமீன்றோன். 291

ஆயுநன்பொனின்மஞ்சத்தின்மரகதம்வயிரந
தாயநண்மணிவயஙகிடத்தீவிகைதுலஙக
வாயுநன்மலர்க்கருபபுரவெறிகமழ்நதழகார்
பாயலெய்தினன்கமலநற்றிருவொடும்பரமன். 292

உருக்குமற்கிளையாளுலகளநதவனுடனே
செருக்குநன்னலன்காண்குவானிருளறசசிறந்தே
யருக்கனற்குணக்கடலிடைவயஙகிடவறையு
மிருக்கொடருக்கியமளித்தனனியாதவர்பெருமான். 293

துன்னுமாமணித்திரள்களுந்தரளமுநதுலஙகும்
பொன்னினாதனத்தலையுறும்பாற்கடல்பொருந்தும்
பன்னகாதிபவணையின்மேற்றிகழ்நதபோற்பரமன்
மின்னனாடொடுவீற்றிருநதனன்றிசைவிளஙக. 294

நீலமாகிரிபவளநற்கொடியொடுநிறைந்த
கோலமாமெனக்கமலமாமகளுடன்கூடி
யாலின்மேலமர்ந்துலகெலாநுகருமச்சுதனார்
சீலமாமணியாதனந்திகழ்வுறவிருந்தார். 295

விடவராமணித்திரள்களும்வயிரமும்விளங்கி
யடையமேதகத்தமணியத்தமர்ந்தொளிரழகே
தொடரவெண்டரளத்திரளொளிகளுந்துலங்குங
குடைபொதிந்தவெண்மதிகலைகூடியதொப்ப. 296

சோமனைச்சடைசுமந்தவன் றுயரதுவகற்றித்
தாமரைக்குளிற்றிருவொடுமுரகமேற்சார்ந்து
காமரைத்தருமுகுந்தன்மேற்கயல்விழிமடவார்
சாமரைத்திரள்பரப்பினர்நிலவொளிதரவே. 297

சூலம்விட்டெதிரிராவணன்சிரங்களைத்துணித்தே
யோலமிட்டநற்கரியினுக்குதவுவோனுவப்பக்
காலன்விட்டவேலெனும்விலோசனமினார்களித்தே
யாலவட்டங்கள்கரம்பிடித்தசைத்தனரறிவால். 298

கோபருக்கெளிதானவனுமையொருகூறன்
சாபமிற்றுகமுறித்தவன்றிருவொடுந்தழைப்பத்
தீபநற்கதிரொளியெனவெடுத்தசேல்விழியார்
சோபனத்துரையமிர்தினற்சுவையெனச்சுரப்ப. 299

முழவுதண்ணுமைச்சரிதாளங்கண்முழங்க
விழைகொள்கொங்கையினிலங்கிடவிளநகைவயங்கக்
குழையசைந்திடச்சிலம்புகள்புலம்பிடக்குதிகொ
ளுழையினோக்கியருருப்பசியொதுங்கவேநடிப்ப. 300

வில்லுநேர்புருவத்தினைநெரிக்கிலார்விஞ்சு
மெல்லுலாவியதுகிரைநேரிலவிதழ்துடியார்
வெல்லும்வேல்விழியிமைக்கிலார்கந்தரம்விம்மார்
வல்லிநேரிடைமாதரார்மகரயாழ்பகர. 301

கோசிகத்தவன்வசிட்டனாரதன்குறுமுனியோ
டாசகல்பதினெண்புராணங்களுமறைய
மாசகல்குணமறையவராசிகளவழங்கு
மோசைதிக்குறவுக்கிரசேனனுமுவப்ப. 302

ஆழிமேலரவிற்றிருவுடன றுயிலமலன்
வேழமூன்வரும்வித்தகன்விதர்ப்பர்கோனருளு
மேழையாமலர்க்கமலமாதவளுடனென்றும்
வாழிவாழியென்றுரைமறைமங்கலமலிய. 303

சமனிலாதவிற்புருவமுந்தாமரைக்கண்ணு
மமலனார்திருமுகமும்புன்முறுவலினழகு

மிமைசெயாமலர்க்கண்களாலெழிலுறநோக்குங்
கமலநாயகிரோமமெய்பொடித்துளங்களிப்ப. 304

வேயிருந்தடந்தோள்களும்விளங்குபூணகிலுந்
தூயசுந்தரவதனமுந்துலங்குவாணகையும்
பாயுநல்லுழைவிழிகளும்வயங்குபங்கயத்தின்
சேயமங்கையைநோக்கிமாறிருவுளமகிழ. 305

சீரினோர்கமலாசனனிமையவர்சேணி
ஞருமாமழைபொழிந்தெனவலர்மஞ்ழசொரிய
வாரிசூழ்துவராபதிக்கிறைவன்மாமுகுந்தன்
வேரிமாமலர்ப்பாவையோடினிதுவீற்றிருந்தான். 306

காசுலாமுலையுருக்குமிணிசசெழுங்கனியை
வாசுதேவனூர்மணம்புணர்ந்தருளுமாக்கதையை
யாசையாலுயர்ந்தறைபவர்கேட்பவரருளே
வீசுஞானமோடுயர்வாபேரின்பவெள்ளத்தே. 307

உருக்குமணி தேவியார் திருக்கலியாணப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் – 305.

---

## 0-வது சாம்புவதி தேவியார் திருக்கலியாணப படலம்.

சுத்தனுகியபிரசேனனைவதைத்தமடங்
கலைதொலைத்தசாம்பவனை
யொத்தியேமற்போர்பொருதுவென்றிழை
மெய்யொளிகொள்சாமபுவதிதன்னுடனே
யத்திருவுவரையணுகிநல்லவிரசால்
சமந்தகமணியினையன்பாற்
சத்திராசித்துக்களித்தவன்மகளை
மணஞ்செய்ததலைவனைத்துதிப்பாம். 1

வேறு.

வீரியவிதர்ப்பன்பெற்றமெல்லியற்ளைத்தேரேற்றிச்
சூரனுயெதிர்ந்துவந்தவுருக்குமன்ரூலையமோதி
யாரியணமரின்வென்றேயமரர்வான்மலர்சுவே
வாரிசூழ்வரையெய்திமணம்புணர்ந்திருந்தநாளின். 2

குந்திதன்மைந்தரோடெங்குருடன்மாபதியையெய்தத்
தந்திமாவுடன்றேர்வந்தகிருபர்தம்பதியிற்சார
நந்தனுமசோதைதானுநலனுறுமபாடிசேர
விந்திரையுடனுமாயனிலங்கியேயிருக்கும்வேலை, 3

தண்கடிமலர்க்காவெய்திசசததிராசித்துமன்னன்
பண்புடையலரியோனைப்பற்றியேதவஞ்செய்காலை
விண்கவினுறவேதோன்றும்வெய்யவனருளானோக்கி
யெண்கலமாழையீனுஞ்சமந்தகமணியையீந்தான். 4

நீதறத்தவந்தான்செய்யசசமந்தகமணியையன்பாற்
சோதிசெய்தபனனீயத்துலங்கிடவுரத்திற்பூண்டே
யேதமிறவரைதன்னிற்சத்திராசிததாணடெய்த
வாதவனிலத்தின்வந்தானென்றறிககறைந்தார்மாதோ. 5

அக்கணஞ்சததிராசித்தரியின்பாலெய்தலோடுஞ்
சக்கரக்கையனிந்தசசமந்தகமணியைததககோ
யுக்கிரசேனற்கீயென்றுரைத்திடமறுததுவேந்தன்
புக்கனன்றமர்களோடுமெபொன்னவிர்கோயிறன்னில். 9

மானவன்சிறிதுநாட்டான்கழிததபின்வையமீதிற்
கானிடைமிருகவேட்டைகாணகுவான்களிப்புக்கொண்டே
சேனைகள்சூழப்பேரிமுழங்கிடசசின்னமார்ப்ப
வானுகர்கிராதரெல்லாமுற்றிடவேகுங்காலை. 7

தவந்தினகரன்பாற்செய்தசத்திராசிததுமன்ன
னுவந்துநற்பிரசேனப்பேரனுசனையுற்றுநோக்கி
சிவந்தொளிர்மணியையீந்துநீயெழிற்பரியினேறித்
திவந்தனின்மிருகவேட்டைசேறியேமீடியென்றான். 8

அன்னவனுரைததலோடுமனபினுற்பிரசேனன்றான்
மன்னவன்வசுதேவன்றன்மைந்தனைவணங்கிததூய
மின்னியவயிற்கையோங்கவிரைவினிற்பரியினேறித்
துன்னியவதிரிபாண்டிதுலங்கியகானிற்சென்றான். 9

அரிநெடுந்தேரின்மீதினமாந்துறநோககலோடு
மிரலைகள்சசங்களகட்கமிபங்கிரையெலலாமபற்றி
யுரனுறமயிடமெணகோடுழுவைபஞ்சானனங்க
டரைமிசைமடியமோதிததானைகள்பரவுங்காலை. 10

அயமிசையேறியாண்டுமேடர்ந்திடுமெபிரசேனன்றான்
பயமிலாதெதிருங்கேழல்கரியரிபரந்தவெல்லாங
கயினுறமயிலினுலேகண்டதுண்டங்களாக்கி
யுயர்குழைசசாலமோங்கும்பழுவததினுற்றகாலை. 11

முழையினுளெழுந்துவந்தமுடங்குழைசீறிக்கணங
ளழலுறவிழிததுநோக்கியயததுடனரசன்றன்னைப்
பழுவமீதுடலபோயவீழப்பாய்ந்தவனுரததினமீதி
னெழிலுறயணியைக்கவ்விமிருகிலததேகிற்றமமா. 12

விண்கதிரவனைப்பற்றிப்பாறுமவெள்ளரவுபோலக
கண்கனலுறத்தானமின்னுஞ்சமந்தகம்வாயாற்கவ்வி

மண்குழையுறவேயோடுமடங்கலைவதைத்துத் தூய
வெண்கிணுக்கிறைவனந்தமணியைக்கொண்டேகினானால். 13

வனங்களிற்பரவும்வேடர்வலைகளைவிளம்பியெங்கும்
புனங்களிற்றிரியுங்கோலப்புண்டரீகங்கள்வவ்வி
யினங்களைத்தடுக்கவேலாவெறிந்தெய்தும்பொதுவர்மாதர்
தனங்களைவிரும்புமாயனுவந்திடத்தந்தார்வீரர். 14

குடதிசைக்கடலின்வெய்யோன்குளித்தலுமாயரில்விற்
கடமுறுவெண்ணெய்நெய்பாற்களவுசெய்தருந்துங்கண்ணன்
மிடலுடைவீரரோடுமிருங்கடனைவீழ்த்தூத
துடிகைக்காகளங்களார்ப்பதுவரையினடைந்தான்மாதோ. 15

அனைவருமெய்தவேந்தன்னனுசனைக்காணானாகித்
துணியுறுமனத்தனானசத்திராசித்துச்சோர்ந்தே
தனமுமிழ்சமந்தகத்தைச்சக்கரன்கேட்டபோதின்
வினையினேன்கொடாதேயெம்பிமாண்டனன்விதியாலென்றான்

கிளைஞரோடழுதுசோர்ந்தேகேசியைவதைத்தசோனாலே
யிளைஞன்வினைசேர்ந்தானென்றுசத்திராசித்தங்கேங்க
வளவில்வெந்துயரமெய்தியரிவையரறைந்ததெல்லாங்
களைகணுயுலகங்காக்குங்கரியவன்கேட்டான்மன்றோ 17

தினகரனுதயமாகத்தேவகிகுமரனானை
வனகனக்குரூரனோடுமாதவனருளாலீந்த
கனகமின்மணியைப்பெற்றகாவலன்கிளைஞரோடுஞ்
சினமுறுமடங்கலெண்குசேர்ந்தமாவனத்திற்சேர்ந்தான். 18

பரிகுரச்சுவட்டின்பின்னேபார்மிசைக்கடிதினேகித்
தரையினினயத்திறேடுமடிந்தவன்றன்னைச்செற்ற
வரிசெலுமடியைநோக்கியவனியின்விரைவினெய்திக்
கிரியருகாகமாண்டுகிடந்தகேசரியைக்கண்டான். 19

மீளியைக்கொன்றுவீழ்த்துவிரைவினினேகுமெண்கின்
றாளினிற்குறியைநோக்கிச்சார்ந்திடப்பிலத்தினுள்ளே
கோளரிதன்னைச்செற்றகொடியவல்லூகநாடி
வேளினைத்தருவோனெய்தும்வேந்துரைநிறுத்திப்போனான். 20

வரையினிற்பிலத்தினுள்ளின்மாயவன்விரைவினெய்த
வரிமலர்ச்சோலையின்கண்ணம்பொனினாசனமீதே
தெரிவையர்சூழவாடெண்களித்தமின்சிறந்தமார்பி
னிரவியினவிர்போற்றோன்றுமெழிலுறுமணியைக்கண்டான். 21

கண்டனன்மணியைமாயன்கவருமுனசாம்பனெய்தி
யெண்டிசைநடுங்கவார்த்தேயென்முனபெதிருமாற்ற
லுண்டுகொன்மடியாதிங்ஙனேடுதிமணிதாவென்ன
வண்டமுண்டருளுமாயோனைக்கையுடனெதிர்த்தானன்றே. 22

வேறு.

முட்டினர்கையைமுறுக்கிநிலத்தே
யிட்டினர்நெஞ்சழுலக்கிரிபோல
வொட்டினர்வாயைமடித்துறமெய்யைக்
கட்டினர்குத்தினர்கண்சனல்பொங்க. 23

உரத்தினடித்தனரோங்கியெழுந்தே
கரத்தொடுகையுறவேகனல்சிந்த
சிரித்தனர்வெம்புகைதீயுறவெண்கின்
விருத்தனுநேரிலாமாலுமவெகுண்டே. 24

அதிர்த்தனர்சாரிகைமாறியடர்ந்தே
குதித்தனர்வெம்புகைகொண்டெழுகண்ணர்
மிதித்தனர்மாமரம்வேர்பறியத்தா
னெதிர்த்தனராவிருபத்திரெட்டெண்ணாள். 25

எண்கினின்வேந்தனெதிர்த்திங்ஙனமோதிக்
கண்கனலுற்றிடவேயொருகாலால்
மண்கொளுமாயன்வன்கைமுறுக்கிப்
புண்கொளவன்சிரமீதுபுடைத்தான். 26

நறுந்துளவன்கையினோடுபுடைப்ப
மறிந்தனனெண்கினின்மன்னவனமண்மே
லிறந்திலன்மீளவெழுந்தவன்மாலென்
றறிந்திருகைதொழுதாடியுரைப்பான். 27

வேறு.

மழைமுகில்வண்ணவுன்னைமாலெனவறியாதிங்ங
னிழிகுலத்தாயவெண்காயுழலுவேனெதிர்ந்துசெய்த
பிழைபொறுத்தருடிநாயேனெபெருந்தவஞ்செய்தேனாதி
முழையினுள்ளிருந்தேன்முன்னர்முதல்வனீதோன்றினாயால். 28

விலங்கலால்வேலைகட்டிவிறலுடையிராமனாகி
யிலங்கையினிருதர்கோனைவதைத்துப்பின்னயோத்தியெய்தி
நலங்கிளர்சோதிதனனினேகுநீநாயினேனைக்
கலங்கலையுன்றனெய்திக்கதியினையருள்வனென்றாய். 29

ஆதலினடியேனுக்குன்பதத்தினையருளவாயென்று
பூதலத்திறைஞ்சிப்போற்றிபொன்மனைபுகுந்துதானே
மாதவமதனாற்பெற்றமங்கைசாம்புவதிதன்னோ
டேதமின்மணியுங்கோடியென்றெண்கின்வேந்தனீந்தான். 30

கடலினைக்கலக்கிமுன்னாட்டிருவுடன்கவுத்துவத்தை
மிடலுடன்பற்றிக்கொண்டானமீளவுமெண்கின்வேந்த
னுடலினைக்கலக்கித்தூயசமந்தகமணிதன்னோடு
மடமகடனையுங்கூடவாங்கியேமகிழ்ந்தானமாதோ. 31

ஆம்பல்வாய்த்தசனமாரமளகமேகநதோடுய்ய
காம்புகண்ணிலஙகுநல்வேல்காதுநாளிகஙகைகாநதள்
கூம்பியகுமிழெண்மூககுக்கொடியிடையிவைசேர்கொம்பாஞ்
சாம்புவன்மகளைக்கணடமாலுமாலானனைறே. 32
சாம்புவன்றனனைநீதானபரகெதிசாதியென்றே
பாம்பின்மேனடிததகோமான்பகர்நதவன்பயநதகொம்போ
டேம்பலொடெய்தும்வேலையிரும்பிலவாயினின்றே
ராம்பரிசுணரார்கண்ணென்மீள்கிலனநதோவென்றார். 33
என்றிடருழன் றுமாயோன்மீள்குவதில்லையென்றே
கின்றிலவொருவினர்போய்நெடுங்கடற்றுவரையெய்தி
மன்றலர்துளவினனீள்வரையினுட்பிலததினேகி
யின்றளவுநதான்மீளானினிவரதில்லையென்றார். 34
மாயவன்வாராரனென்றுவநதவரியமபலோடுந
தாயருநதநதைதானுநதாலகேதனனுமிக்க
நேயமாம்விதர்ப்பன்பெற்றநேரிழையாளும்வீழ்நதே
மாய்வம்யாமென்னுமவேலைமாதவனவநதான்மன்றோ. 35
எழிலுறுமணியையெணகினவேநதன்றனீநதெல்லா
மழுதழுதிரஙகுகினறசததிராசிததுககன்பாற்
குழகனுண்டுைததுகைகயின்சமநதகஙகொடுததபின்ன
ருழைநிகர்விழியினாளோடொண்மனைபுகுநதானன்றே. 36
தநதையைத்தாயர்தம்மைவணஙகினன்சககரத்தோன்
சிந்தையிற்றுயரமாறிததிருமகிழ்ந்தடியின்வீழ்நதா
ளிநதுநேர்வதனதெண்கின்பாவைசென்றிறைஞ்சலோடுஞ்
சந்திரவண்ணனன்னைதேவகிதழுவினால். 37
பல்லியமுழங்கததேவாபன்மலர்தூவியேத்த
மெல்லியர்பல்லாண்டோதவிளஙகுதீபஙகள்சூழ
நல்லியற்கர்க்கனெய்தநவையறுசாமபனல்கு
வல்லியோடொருபீடத்தின்வயஙகினன்மாயன்மாதோ. 38
ஓமநான்மறையையோதியொளிருமநதணாகள்செய்ய
வாமனன்சாம்பனல்குமஙகைதன்கந்தரததின்
காமர்மஙகலநாண்சாததிக்கனல்வலமாகவநது
மாமலர்க்குழலியம்மிமிதித்திடவடமீன்கண்டார். 39
இருக்கறைநதிலங்குகின்றகர்க்கனையிறைஞ்சியேகித்
தருக்குறுமெண்கின்வேநதன்றனையைசாமபுவதிமின்னு
ளுருக்குமற்கிளையாடாலின்வணஙகியேயுவகையோஙகத்
திருக்கறவெழில்கொள்வாசுதேவனுடிருநதாளன்றே. 40
சாம்புவதி தேவியார் திருககலியாணப் படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் — 345.

# 81 - வது, சத்தியவாமை தேவியார் திருக்கலியாணப்படலம்.

ஆதியாயகண்டமுற்றுமயின்றிடந்துமிழ்நதானநதச
சோதியாய்ச்சுருதியாலுஞ்சாங்கியந்தனினுந்தோன்று
நாதனாய்நளினமாதினாயகனாகிமெய்யாய்
நீதியாய்நெறியாய்நின்றநிமலனைவாழ்த்துநெஞ்சே. 1

ஏடுடைமலர்மின்னைவிந்திரைசாமபனல்கும
பீடுடையரிவைசூழப்பெருநலமுற்றவெனறிக்
கோடுடைக்கடமானினுங்கொடியிடையிரதமேவ
வாடுறுவலங்கன்மார்பனலனுறவிருந்தநாளில். 2

மறுவிலாவெம்பிதனைமடங்கல்கொன்வதைத்தாண்டேகக்
குறைவிலாமுராரிசெற்றுச்சமந்தகங்கொண்டானென்றே
யறிவிலாதுரைத்தேனென்றுசத்திராசித்துமன்ன
னிறைவனுமாயனறனபாலெய்தியீதியம்புவானால். 3

சித்தநன்றனையானசீதரன்றன்னைநோக்கி
சுத்தநற்றவத்தனாயசத்திராசித்துச்சொல்வான்
வித்தகயான்றனபெற்றமெல்லியல்விந்தைபோல்வாள்
சத்தியவாமைதன்னைத்தருகுவனுனக்கென்றானால். 4

அந்தச்சொல்வசனங்கேட்டேயச்சுதன்விருப்பமெய்தச்
சிந்தையின்மகிழ்வினோடேதக்கணவனனறனை
மைந்தனுமாயனுக்குணமகணெழில்வடிவுமிக்க
சுந்தரிதன்னையீதனனென்றசொல்லினானால். 5

மன்னவனவசுதேவனன்றுரைத்தலுமகிழ்ந்துவேந்தன்
நன்மணஞ்செய்யநாணீர்நவிலுமென்றுரைத்தலோடும
மன்னமென்னடையினாள்கையச்சுதன்பற்றிவாழ
வின்னவினமுகூர்த்தமின்றென்றந்தணாரியம்பினாரால். 6

வேதியர்கூறக்கேட்டுச்சத்திராசித்துவேந்த
னோதநலுவரிதன்னிலமுதமுண்டாரையொத்துத்
தீதகலகோயிலபுக்கான்சிறந்திடும்பூகங்கன்னல்
வீதிகணிறையவெங்குமவிளங்கிடநிறைத்தார்மாதோ. 7

மகரதோரணங்களோடுமெய்யங்குகமபலம்வானோங்க
நிகரில்பொற்குடங்களெங்குநிறையச்செந்தீபந்துன்னச்
சிகரநனமணியெல்வீசச்சிறந்தலர்மாலைநாலப்
புகரிபமிவுளிபொற்றேர்பொலிந்தனவீதியெல்லாம். 8

நித்திலங்களையள்பசுசைநிறத்தினள்நீண்டகண்ணி [ள்
தத்தையைப்போன்மொழியாள்காந்தட்டைக்கையாள்மேவயகொடோளா

சித்திரம்பழித்தமெய்யள்சிலையெனும்நுதலாள்சீராஞ்
சத்தியவாமைவண்மைச்சத்திராசித்தன்பாவை. 9

இன்னலனெய்தவோங்குமிமையவர்பதியினெய்து
மின்னிடைமடவார்நாணவிளங்கியவமிர்தம்போலவா
டன்னிகரிலாதவேற்கட்சத்தியவாமையென்னுங்
கன்னியைவனைதல்செயவான்கவினுறுமடவார்சூழ்ந்தார். 10

எண்ணரும்விண்ணின்மீதினெழுந்திடுங்கதிரினூரா
டொண்மலர்வாசம்வீசுங்கருப்புரமாரமுத்தந்
தண்பனிநீரின்வண்மைசத்தியவாமையோங்கும்
மண்மகளாயமங்கைமஞ்சனமாடினாளால். 11

இரணியம்வயங்குநீவித்துகிலுடனிலங்கத்தாளிற்
பரிபுரம்பாதசாலம்பரியகம்வயங்கமாழை
வீரசியகலாபம்வஞ்சிநுசுப்பிடைவிளங்கச்சாம
வருணமாரளகந்தன்னின்மருமலர்சூட்டினாரால். 12

சிந்துரத்திலதந்தீட்டிச்சிவந்தநன்மணிகளான
சுந்தரத்தோடுங்கொப்புந்துலங்கியகாதிற்றேன
கந்தரத்திலங்குகின்றகலனகணற்கவினைக்காட்ட
நந்தொளிர்வயிரமின்னுங்கடையநற்கரத்தினிட்டார். 13

நளினமென்முகைபோற்செப்புநாணவேயரும்புங்கொங்கை
வளமுறுந்தரளநீலமணிகொடாவடங்களோங்க
மிளிருமவேனயனந்தன்னிலஞ்சனம்விளங்கிக்காட்டத்
தளிரடிமடந்தைநின்றுடாமரையாளுநாண 14

பொற்புறவயங்குகின்றபூங்கொம்புபொலிவபோல
விற்புருவத்தினங்கைவிளங்கியசெயலைக்கண்டே
கற்புடைமடந்தைமாதர்கள்கருப்புரதீபங்காட்டிச்
சொற்பகாகிளியினுண்மூனசோபனம்பாடினாரால். 15

பொன்னவிர்கால்களோங்கப்புதுமணியினங்கடுன்ன
மின்னுபொற்குடங்களோங்குமவிளங்கியவூசன்மீதிற்
சின்னநனமலர்களபூத்துததிகடருங்கொம்பாமென்ன
வன்னமுநாணவெய்தியமர்ந்தனளவனிமின்னே. 16

வாசநாண்மலர்களெங்கும்வானவர்பொழிந்துவாழ்த்த
வீசுசாமரைகண்மல்கவிளங்குதுந்துமிகளார்ப்பக்
காசினியோர்களேத்தக்காலினில்ஞெகிழிபம்ப
வூசலினாடினாண்மின்னெணமணிவடங்களாட. 17

இன்னலனெய்துமங்கையினியபொன்னூசலாடத்
துன்னியகரிதேர்வீரர்துரகமண்ணிறைந்துசூழப்
பொன்னவிர்கவிகையோங்கப்புகரியவெரினின்மீது
மின்னியமுகிலேயேலவிளங்கியவிமலன்வந்தான். 18

துடிகைமாமுரசந்தக்கைதுந்துமிகறங்கவேந்தற்
கொடிகுடைகவரிமல்கக்கொம்புகாகளங்களார்ப்ப
வடவரையுச்சிமீதின்வயங்கியமேகம்போற்றன்
னிடர்களைவான்றனெய்தமகிழ்ந்தனளெழில்கொண்மங்கை. 19
மும்மதவிபத்தின்மீதின்முன்னின்றமுராரிதோளிற்
செம்மைசேர்வனசமாலைசிறந்திடவெறிந்தாளன்னங்
கைம்மலைதன்னைக்காத்தோன்கழுத்துயர்கழுநீர்த்தொங்கல்
விம்மியமுலையினுடன் விளங்குகந்தரத்திற்சேர்த்தான். 20
அன்னலங்கண்டவானோரரம்பையர்முதலோராடப்
பொன்னவிருசன்மீதிற்புயலெனவெய்தியேதான்
மின்னிடையணங்கினோடும்விளங்கிடவாடச்சூழ
மன்னவர்மடந்தைமார்கண்மகிழ்வுடனோக்கினரால். 21
பரிவுடனுண்டுகொன்றுபதத்தளந்திடந்துகாட்டி
யிருகரமதனாலேந்தியிலங்கியதொடையின்வைத்தும்
புருடவுத்தமன்மாறீரனாகியேபுவிமான்மீண்டும்
மரசரிலடைந்தாளோடூசன்மீதாடினானால். 22
அன்னவளோடுமாயனந்தணராசிகூறத்
துன்னுதூணயுஞ்சூழ்ந்துதுலங்குமாமண்டபத்தின்
மின்னுமொண்மணியினங்கள்விளங்குமாதனத்தின்மீதே
பொன்னெடுங்கவரிவீசப்புயலெனவிருந்தான்மாதோ. 23
சுத்தனுங்கர்க்கனோடுந்தொடங்கியாகுதிதான்செய்யச்
சத்தியவாமையெனனுந்தத்தைதன்கந்தரத்தின்
சித்தசன்றன்னைத்தந்தோன்சிறந்தமங்கலநாண்சாத்த
வுத்தமிபாதத்தம்மிமிதித்தனனுவகையோங்க. 24
மாயவனவனியாயசத்தியவாமையோடுந்
தேயுவைவலமாய்வந்துசிறந்தருந்ததியைநோக்கித்
தூயமாமறையோராசிசொல்லிடவிமையோர்வாழ்த்தத்
தாயரையிறைஞ்சித்தந்தைதாளினின்வணங்கினானால். 25
மாமியர்தாளின்வீழ்ந்துசத்தியவாமைவண்மைக்
காமனைத்தருவாடாளினிறைஞ்சியேகருணைமல்கும்
சோமனைநிகர்க்கும்வண்ணன்றேவியைவணங்கித்தூய
பூமனைத்தந்தானோடுமெபொற்புறவிருந்தாண்மாதோ. 26
அருணன்றன்னனுசனூர்தியாகவேயருளுமாயோ
னிரணியகலத்தினன்னமருந்தினனின்பமெய்தி
வருணமாமணிப்பொற்கட்டிலெய்திமன்மதனுநாணத்
தரணிமின்னுடனல்லின்பத்தணைந்தினிதிருந்தானன்றே. 27

சத்தியவாமைதேவியார் திருக்கலியாணப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - 373.

---

# 82 - வது, சத்தனுவாவதைப்படலம்.

நவையகல்சிந்தையோடுநற்கனியெல்லாம்வைத்துச்
சுவையுறநுகர்தியென்னத்தொழுதின்பமெய்திநின்ற
சவுரிக்கன்றுயர்வீடீந்ததசரதராமன்றாளிற்
பவமொடுபிறப்பிறப்பும்பற்றறப்பணிவோம்யாமே. 1

அறனுறுமக்குரூரனலாயுதனுத்தவன்றா
னெறிவசுதேவன்றன்னோடளப்பிலாநிருபர்சூழ
மறுவிலாமணிப்பொற்றூண்கள்வயங்கியமண்டபத்திற்
கறையடிதன்னைக்காத்தோன்கவினுறவிருக்குங்காலை. 2

படவரவுயர்த்தோன்றாதைபணியினால்வந்ததூதர்
கடுமுறுகரியைச்செற்றகண்ணனையிறைஞ்சியேதிக்
கொடிநிறைவாரணாசிதனிலைவர்குந்தியோடும்
படரனலுறவரக்குமனைதனில்வீந்தாரென்றார். 3

இறந்தனர்குந்தியோடுமைவர்களென்றலோடும்
மறைந்தவருய்ந்துபோனாரென்பதுமாயவன்றா
னறிந்திருந்தறியான்போலவருள்செறிதாதைதன்னை
யுறுந்துயரதினால்வாடியுற்றனைத்தழுதானம்மா. 4

மைத்துனமார்களன்னைதன்னொடுமடிந்தாரென்றே
வித்தகனிரங்கியேங்கிவிடவரவுயர்த்தவேந்தன்
சித்தமார்துயரநீக்கிச்சிந்தைநோய்தீர்வனென்று
வத்தினாபுரத்திற்றேர்மேலச்சுதன்சென்றான்மன்னோ. 5

அரியிரதத்தின்மீதினத்தினாபுரத்திற்செல்ல
வுரகமீதுயர்த்தகோமானுற்றவரெதிரேசென்று
பருவரலெய்துவான்போற்பரமனைத்தழுவலோடு
மிருவருஞ்சிந்தையுள்ளின்களிப்புறவிரங்கினாரால். 6

கருமுகில்வண்ணன்மாயன்கட்செவியுயர்த்தகோவை
யருவினையாவராலுமகற்றொணாததனாலையா
வெரியினிற்குந்தியோடுமிறந்தனரென்றிங்கெய்துந்
தெருமரலொழிதியென்றேசெப்பியாண்டிருந்தான்மன்னோ. 7

வீடுமன்விதுரன்கன்னன்விமலன்றாளிறைஞ்சிநிற்பச்
சேடுடைத்துரோணன்சேயோடெய்தியேயாசிசெப்பக்
கோடுகையேந்தினானைக்கண்ணிலான்குறுகித்தீயின்
வீடினர்புதல்வரென்றுவிம்மியேயழுதான்மாதோ. 8

துணியுறுவோரையெல்லாஞ்சுந்தரனோக்கியேதான்
வினைவலிதன்னினாலேயெரியினில்வீடினார்க்கீண
டனைவருமிரங்கியென்னபயனினியவர்களெல்லா
மினிமையாங்கதியையெய்தவெள்ளுநீரிறையுமென்றான். 9

அலாயுதன்பின்னோன் சொல்லவரவுயர்த்தோன் றன்பின்னோ
ரெலாரும்வந்திரங்கியேதானெரியினிலிறந்தோர்க்கெல்லாந்
திலோதகமளித்துப்பிண்டந்திரட்டியேகளித்தாண்டிட்ட
புலாலர்தஞ்செயலைநோக்கிப்புயல்வண்ணனிருக்கும்வேலை. 10

பாந்தண்மீதுயர்ந்தோனவைகும்பதிதனிற்பரமன்றேர்மேற்
சார்ந்திடவக்குரூரன்சத்தனுவாவைநோக்கி
வேந்தநீகேட்டிநேரிற்சத்திராசித்துவிந்தை
காந்தனுக்களித்தானன்றேதானபெற்றகன்னிதன்னை. 11

கிருதவன்மாவுநீயுமிருக்கக்கேசியைத்தான்செற்ற
வரிதனக்கரிவைதன்னையளித்தவனுவிசோரப்
பரிதனோடிறந்தானோடுங்கூட்டியொண்மணியைப்பற்றித்
தருதியேனன்றென்றோதச்சத்தனுவாவுஞ்சொல்வான். 12

உன்னையுமென்னைத்தானுமுயர்குலக்கிருதவன்மாத்
தன்னையுமிகழ்ந்துவெண்ணெயதிருகர்ந்தவனுக்கங்கே
மின்னினையளித்தானுவிவிண்ணுறவதைத்துப்போக்கி
நன்மணிகவர்ந்துமீள்வனென்றிடநலனீசென்றான். 13

நிசிதனிற்கன்னமிட்டேநிலவரையதனுளெய்திச்
சசிநிகர்படிகமாடந்தனிற்றுயில்கின்றான்றனனைச்
சுசியுறுங்கண்ணன்வாளாற்றுணித்துநன்மணியைவாங்கி
வசையுறமனையின்வந்தான்சத்தனுவாவாமன்னன். 14

தந்தைதான்மடிந்ததன்மைசத்தியபாமைகேட்டு
வந்துமண்ணிடையின்வீழ்ந்துவயிற்றிடையெற்றியந்தோ
யெந்தைநீயிறந்தாயிங்ஙனென்செய்கேனென்றுநைந்து
சிந்தையிறகலங்கிப்பின்னர்ச்சினமுறச்செப்பலுற்றாள். 15

எந்தையைவதைத்தானுவியென்னுயிர்க்கொழுநனோலே
யந்தகபுரத்தினேற்றியரும்பகைமுடிப்பனெனச்
சுந்தரியியம்பிவாளாற்றுணிபட்டதாதைதன்னைச்
சிந்தையினிடருற்றேதானதிலதயிலத்திலிட்டாள். 16

மரகதநிறத்துமங்கைவாயுவின்முந்தியேகுங்
குரகதமிசையினேறிக்கொடியவாரவீக்கி நெஞ்சி
னெரிகதமுறவேகங்குலேகுமுனிமைப்பினெய்தப்
பொருகதைகரத்திலேந்தியத்திமாநகரிற்புக்காள். 17

அத்தினபுரத்திற்சென்றேயரிதிருவடியிற்றாழ்ந்து
சத்தியபாமைதந்தையிறந்தமைசாற்றலோடும்
வித்தகன்றேவிதன்னைத்தழுவியேவிம்மிக்கண்ணீ
ருத்தரீகந்தான்றங்காதோடவேயிரங்கினானால். 18

இரங்கியவிறைவன்றேவிதன்னுடனிமைப்பின்முன்னே
துரங்கமீதிருவருந்தானேறிவான்சுரர்கள்போற்றக்

கருங்கடலகழியாகக்கவினுறு துவரையெய்திக்
குரங்கலோசனிதன்றாதைகோயிலினடந்தானம்மா. 19

சக்கரந்தரித்தானெய்தசசத்தனுவாமாயன்றா
னுக்கிரமாகிவந்தான்செய்யுமாறுரைததியென்ன
வக்குரூரன்றான்கேட்டேயரியுடன்பகைத்தாரெல்லா
மூக்கினரல்லாலியாவருய்ந்தனரென்றுசொல்வான். 20

சத்தியவாமைதந்தைதனைவதையென்றார்சொன்னார்
சித்தசன்றன்னைத்தந்தான்செருத்திறமறிந்திலாயோ
குத்திரமாகிககஙகுறன்னிடைக்கொன்றைநீதா
னித்தலத்திருந்துசாகாதேகுதிவிரைவினென்றான். 21

கூறியவக்குரூரன்கரத்தினிற்கோடியென்று
வீறியசமந்தகத்தைககொடுத்தவன்விரைவிற்செல்லும்
மாறிலாவிவுளிமீதின்வடதிசைநோககியேதா
னூறுகாவதஙகழிநதுநொடியினிற்சென்றானன்றே. 22

வேறு.

தூயசத்திராசித்துவைவாளினாற்றுணித்துத
தீயனாகியசத்தனுவாசென்றதன்மை
மாயவனறிந்தலாயுதமன்னவனுடனே
பாயுமாவிரதத்தின்மேற்பார்மிசைசசென்றான். 23

வாயுவின்விசைபின்னுறமணிநெடுந்தேர்மே
லேயெனுமுணர்நூறுகாவதநெறியேகித்
தீயவன்றனையடர்தலுமிதுலையிற்சிறந்த
தாயகாவினிற்சத்தனுவாவயம்வீழ்நத. 24

சோலைதன்னிடைத்தூயதாந்துரகம்வீழ்ந்திடலுங
காலிற்காலெனச்சத்தனுவாக்கழிநதிடவே
சீலமாயவன்றேரினுமிழிந்துதானோடி
கோலநேமியாற்கொடியவன்சிரத்தினைக்கொய்தான். 25

தரையின்வீழ்ந்திடுஞ்சத்தனுவாவினைமாயன்
றெரியநோக்கிநற்சமநதகமணியினைக்காணான்
விரைவின்மீண்டுதன்முன்னவனுடனிவைவிளம்ப
வரவுருத்தவிர்வோன்சொல்லையையமாயறைவான். 26

இரவிசத்திராசித்துவுக்கீந்தநன்மணிக்கிங
குரியனீயலாலெனக்கதனாற்பயனுண்டோ
கரவலன்கையினிற்காண்கிலேமணியெனிலென்ன
விரைவினினன்னகர்க்கேகெனமிதிலையிற்போனான். 27

முன்னவனிவைவிளம்பலுமுராரிவெண்ணகைசெய்
தின்னவின்மணிகண்டிலனென்மொழிமெய்யென்

றுன்னிமன்னவவொண்ணகரடைதியென் றுரைத்துக்
கன்னலொன்றினிற்கடிபொழிற் றுவரையினடைந்தான். 28

கரவினல்வதைசெய்தவனுயிர்களைந்ததனே
யுரைசெய்தேபினர்சசத்திரசித்துவையுயரு
மெரியிற்சேர்த்தியேயிருபுனற்கிரியையுஞ்செய்வித்
தரிதன்றேவிதன்னருந்துயரகற்றியங்கமர்ந்தான். 29

வாசிமீதிற்போய்மாண்டவன் றுவரையிலீந்த
தேசிசெண்கலத்தனமுமிழ்மணியினேடேகிக்
காசியின்னிடைககாநதினிசுதனினிதிருநது
மாசில்வேள்விகள்செய்துமாதானமுமீநதான். 30

ஆயவாறெலாஞ்செயதவக்குரூரனையறிநதே
மாயன்ருன்வெருவாதிவண்வருதியென் றுரைத்து
நேயமாகியகிருபரைவிடுத்தலுநெறிசேர்
தூயகாநதினிசுதன் றுவராபதியடைந்தான். 31

ஆழியானடிக்கமலத்தினிறைஞ்சியக்குரூர
னேமையேன்பிழைபொறுததியாற்றபனனன்றீநத
மாமைழயின்மணியிதுவெனமன்னர்முன்கொடுப்ப
வேழம்வீழ்த்தவன்மீளவுமவன்கையிற்கொடுத்தான். 32

மதியைநேர்வணன்மாயனையொருவியேயேகி
மிதுலையின்வெகுலாசுவமன்னன்வேதியரோ
டெதிர்கொண்டர்ககியமளிததிடவின்னமிர்தருந்திப்
புதியநன்மலர்குஞ்சியிற்புனைநதினிதிருநதான். 33

வேறு.

வீரியவலாயுதன்ருன்பெற்றிடவிளஙகுமின்ஞள்
பாரின்மேற்சிறந்தபானுமதியினைப்பரிவினலே
வாரிபோலொலிப்பப்பேரிமறையவரோமஞ்செய்ய
நேரிலாவியாழமோஙகுகிருபனுக்களித்தானம்மா. 34

வேறு.

ஆயகாலையினக்குரூரன்மணிகொண்டே
தூயகாசியினிருநதுபின் றுவரையினையதி
மாயவன் றனைவணஙகியவாறெலாமறிநது
நேயமாயெய்துமநதணர்நிகழ்ததினரன்றே. 35

இநதநல்லுரைகேட்டலுமிநதுவண்ணன்ரு
னந்துகையுறுநாரணனுரைபழூதென்றே
சிநதையினினைநதேனநதோவென் றுரைசெய்து
வந்துநற்றுவராபதியடைந்தனன்மாதோ. 36

சீலமாகியவலாயுதன்திருவடிதன்னின்
மாலிறைஞ்சிடத்தழுவியேமகிழ்ந்தினிதிருப்பக்

கோலநன்மணிகாந்திநிசுதனெய்திக்கொடுப்பத்
தாலகேதனன்சத்தியவாமைக்குக்கொடுத்தான். 37

வினையெலாமறவேதியராசிகள்விளம்பத
தினகரன்றனக்கன்பனுஞ்சத்திராசிதின்
றனையளாகியசத்தியவாமைதன்மனத்திற்
றுனியகன்றிடச்சுந்தரனிருந்தனன்மன்னோ. 38

சத்தனுவா வதைப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - 411.

---

## 83 - வது, காளிந்தி தேவியார் திருக்கலியாணப் படலம்.

---

வேளுந்துதிசெய்யவிசையனோடுகானேகி
நாளுந்திரைக்கடலினண்ணுதவன்பயந்த
காளிந்திநற்றவங்கண்டேமணந்தகண்ணன்மலர்த்
தாளுந்துநம்வினைகள்சாற்றுமவன்பெயரே. 1

வித்துருமமொத்தவிதர்ப்பனுவந்தருண்மின்
சத்தியவாமைநலசாம்புவதிதற்சூழ
நித்திலம்பொன்னீலநிறைந்தமணிமண்டபத்தி
னத்தினொளிர்செங்கையசிவீற்றிருந்தநாட்டனிலே. 2

வேறு.

அரவுயர்வஞ்சன்செயதவரக்குமாளிகையினிட்ட
வெரியிடையுய்ந்துவேந்தர்குந்தியோடெயதியேதான்
வரைதனிற்றுயிலவந்தவிடும்பனைவதைத்துவீமன்
சரியிலாக்கமலவல்லிதனையணைந்திருந்தநாளின். 3

அன்னவள்வயிற்றிற்றோன்றுங்கடோற்கசனுடனேயந்த
மின்னவணிருக்கவைந்துவீரர்களன்னையோடு
மின்னலின்மறையோர்வாழுமேகசக்கரத்தினெய்தி
வன்னிபோற்கனன்றுவந்தபகனைவாள்வீமன்கொன்றான். 4

மறையவரிடரைநீக்கிவல்லையினேகிசசெல்லு
நெறிநிசிநிறையவாற்றினீர்விளையாட்டினின்ப
முறுமுயரங்கிராமேல்விசையனோர்கொள்ளிவிட்டே
யெறிதலுந்தோற்றவன்றாளிறைஞ்சிடவவனையோவி. 5

பரிகரியிரதமிக்கதுரோபதன்பதியையெய்தி
யரசர்கள்வளைக்கமாட்டாதவனியிற்கிடந்தவில்லை
விரைவினினாணையேற்றிமீனெய்தவிசயனமார்பி
னரியுறுமலங்கறன்னைத்தும்பராபலந்தயணிந்தபின்னர். 6

வரிசிலைவளைக்கமாட்டாமன்னவர்திரண்டுதேர்மேற்
பொருதவர்வென்னிட்டோடப்புகையுறுவாளியெய்து
தருமனோடைவரெய்தித்தையலைவதுவைசெய்தே
யிரதமீதேறிப்பாண்டுமுன்னவன்பாலினேக. 7

அந்தணாமரசன்பின்னோனருளியவைவர்கட்கு
மிந்திரப்பிரத்தமீயவிரதமீதேறிப்பாரி
னந்தமாநகரினெய்தியடைந்திடுமியல்புக்கெல்லா
மிந்திரைகொழுநன்றன்பாற்றருமன்றாதேவினானல். 8

வந்திடுந்தூதரெய்திமாதவனடியிற்றாழ்ந்து
குந்திதன்சுதர்கள்செய்கைகூறிடக்கேட்டுமாயோன்
சிந்தையின்மகிழ்ந்துதந்தைக்கிளையனாஞ்சினிதான்பெற்ற
மைந்தன்சாத்தகிதன்னோடுமணிநெடுந்தேரிற்போனான். 9

இந்திரப்பிரத்தத்தேகியைவர்களெதிர்வந்தெய்த
வந்தமாலறன்சேய்தன்னைவீமனையிறைஞ்சியாங்கே
யிந்திரன்றனையன்றன்னைத்தழுவிமத்திரைதானீன்ற
மைந்தர்களடியின்வீழக்குந்தியைவணங்கினானல். 10

மாயனைப்பாஞ்சாலன்றன்மகளெய்திவணங்கநோக்கி
நேயமோடாசிகூறிப்பின்னர்மஞ்சனநீராடித்
தூயவின்னமுதருந்திப்பாண்டுவின்சுதர்களோடும்
வீயுறுமலங்கல்சூடிவித்தகனிருந்தான்மாதோ. 11

இந்தரப்பிரத்தந்தன்னினீரிரண்டாயதிங்கள்
சிந்தையின்மகிழ்ந்துமாயோன்சிறந்தினிதிருந்தபின்ன
ரிந்திரன்சிறுவனோடுமெழில்வனத்திடையினெய்தி
மந்திபாயுய்யானத்தின்வனப்புறவிருந்தவேலை. 12

பாவகன்மறையோனாகிப்பசிமிகவுடையேனென்னத்
தேவர்கோன்சிறுவனேதாற்றீருமுன்பசிதானென்னக்
காவினினுயர்ந்தகாண்டாவனந்தனைக்காட்டியேதான்
றாவிதுண்பேனானென்றுதழலுருவாகிநின்றான். 13

தனஞ்செயனதனைக்கேட்டுத்தனஞ்செயன்றன்னைநோக்கி
யனஞ்செறிந்துயர்ந்தகாண்டாவனந்தனையளித்தேனென்ன
மனஞ்செறிமகிழ்வினோடும்வனந்தனையனலோனுண்ணக்
கனஞ்செறிவானமெல்லாங்கரும்புகையாயிற்றன்றே. 14

ஆயிரங்கண்ணானோகியனைவரும்பொன்றவூழித்
தீயிதோவெழுந்ததென்றுசெப்பிடத்தேவதூதர்
தூயகாண்டவனத்தைச்சுட்டிடுமெனலீதென்ன
மீயுயர்கரியினேறிவெகுண்டனன்விபுதர்கோமான். 15

அழலினைக்கடுகியேசூழ்ந்தவிமின்களென்றுகூற
வெழிலிகளெழுந்துதூண்போற்றாரையாய்ப்பொழியக்கண்டு

குழ்லினையூதுவோன்றன்மைத்தனன்குனிவிலாலே
மழைதடுத்தனலைக்காத்தான்வாளியாற்கூடமாக்கி. 16

அன்னதுகண்டேதேவராயிரங்கண்ணனோடுந்
துன்னினர்திசைகளெங்குஞ்சுடுகணைபொழிந்தங்கார்த்தார்
மன்னவன்விசையன்கீறிவலாரிதன்னுடனேவானோர்
வென்னிடவிசிகமாரிவில்லினாற்பொழிந்தான்மன்னோ. 17

நயனமாயிரத்தோன்றானுநாகர்கள்முடுகிப்பெய்யும்
புயலொடுமிரிந்துபாறப்பொங்குதீயடர்பூங்காவி
லயனெழிற்பிதாவையுன்னுமவர்வினைக்ககப்படார்போன்
மயனொடுமுனிவரெல்லாம்வருந்திடாதுய்ந்துபோனார். 18

தூயகாண்டாவனத்தைமுதலறச்சுட்டுத்தோன்றுந்
தேயுவாள்விசயனுக்குச்சிறந்திடுநற்காண்டீபம்
பாயுமாவிரதந்தன்னோடரிக்கொடிபரிவாலீந்து
மாயனைமலர்கொடேத்திமலரடிவணங்கிப்போனான். 19

சந்திரனனுங்காண்டாவனந்தனைத்தழலுக்கீந்து
சுந்தரவிசயனோடுநதுலங்கியவிரதமீதி
லிந்திரப்பிரத்தத்தெய்தியிருந்திடவெரியினாலே
வெந்திடாதுய்ந்துபோனமயனவண்விரைவிற்சென்றான். 20

நீரெனப்படிகந்தோன்றப்பளிங்கெனநீருந்தோன்றச்
சீருறவயங்கியோங்குமண்டபமிரண்டுசெய்து
பாருறுமைவர்நோக்கிப்பரிந்திடமயனுந்தச்ச
னாரியன்றாளின்வீழ்ந்தேயமரர்தம்முலகம்புக்கான். 21

மயன்விடைகொண்டுபோனபின்னர்மால்விசயனோடு
மயமுறுதேரினேறியணிகமாவெள்ளஞ்சூழப்
புயலடர்கிரிசாலங்குரவகம்பொருந்தவோங்குங்
கயமுறுகானின்வேட்டைவிரும்பியேகடிதிற்சென்றார். 22

வேறு.

கொம்புகுறித்தனர்பகழியெடுத்தனர்குனிவில்லார்
பம்பையடித்தனர்கடிதினினுற்றனர்படிமீதின்
கம்புமுழக்கினர்கணைகள்விடுத்தனர்கதமல்கு
மும்பனுகைத்தனர்வயினர்வளைத்தனருரவோரே. 23

கரிநிறைபற்றினர்முயல்களடித்தனர்கடிதோடி
வரையினினுற்றனர்பகழிவிடுத்தனர்வளைவில்லோ
ரரிசினமுற்றிடுமெரியைவதைத்தனரிடியஞ்சு
முரையினர்சுற்றினர்முடுவலைவிட்டனருயர்வேடர். 24

ஊக்கமிகுத்தவர்கணைகள்விடுத்தனருயரோங்க
லாக்கையர்கச்சையின்மீதுடைவாளினரமரஞ்சார்

நோக்கழலுற்றவரிடிகளுமஞ்சிடநொடிவாயர்
சீக்கைவிளைத்தனர்வலைகளைவளைத்தனர்சினம்விஞ்ச.

கறடிபிடித்தனர்மயிடமடித்தனாகணையேவி
நெறிகளடைத்தனர்ஞமலியைவிட்டனர்நெறியாக
வுறுகதமுற்றிடுமுழுவைகள்செற்றனருருமேபோற்
பறைகளடித்தனர்துடிகைகள்கொட்டினர்படிமீதே.

கலைகளடித்தனர்கசமுயிர்செற்றனர்கடிதோடி
வலைகள்வளைத்தனருழைகள்வதைததனர்மயிடத்தின
றலைகளறுத்தனர்கரியைவதைததனர்தரைமீதிற்
புலிகளடர்த்திடவதனையெதிர்த்தனர்பொரும்வேடர்.

மாவினிலுற்றவர்வாளையெடுத்தனர்வயவீர
ராவியமிற்றிடவேகதைவிட்டனரழல்வாளி
தூவியடர்ததனரிருளிவதைத்தனர்சுடர்வேலா
லாவிசெகுத்தனரோவியகாயத்தினையம்மா.

கட்கமெடுத்துயர்கடகம்வதைத்தனர்கடிதேகி
யுட்கதமுற்றிடுமிபநிரையட்டனருடைவாளான்
முட்கொடிதாயடர்கானின்முடஙகுழையுயிர்செற்ருர்
புட்கொடிவீரன்விரும்பிடவேபொருமரிகொன்ருர்.

பாத்தன்விலால்வெயபகழிவிடுத்தேயரிகொன்ருன்
சாத்தகிசார்த்தூலஙகரிகிரிவெநதழல்வாளி
கோத்துயிர்செற்ருன்கொம்புகுறித்துசசினவேட
ராரத்துழையாளியாவிதமெல்லாம்வதைசெயதார்.

கந்தமெடுத்துக்கந்தனின்வைததேகழைமேவும்
பந்தரினின்றுபந்தமுயர்த்துப்பல்லீயச
சிநதவிசிந்தகுழிசியினசசாரஞ்சேர்ததே
நந்தர்தனந்தன்றன்முனருயததார்நல்வேடா.

சித்தசனத்தன்மைத்துனனேடுயர்தேரேறி
யத்திரம்விட்டெயொண்குகரித்திரளருணஙகள்
சித்திரகாயமரித்திரளும்வதைசெய்தேவா
ணத்தொடுகெயலுறும்யமுனையினண்ணினன்வெயில்விஞ்ச.

வேறு.

வெயிலவன்வெம்மையாலேமெலிவுற்றுவிரைவினெயதி
யயமுடன்கரிகண்மன்னரணிகமெல்லாமுஞ்சூழ்ந்து
கயலொடுவாளைதாவக்கமலஙகளலர்நதுதோன்றும்
பயமுறுயமுனைதன்னிற்படிகநீராடினூரால்.

சீதரனதிநீராடிச்சிறந்திடுய்யானத்தெய்தி
யேதமில்விசயனுஙகேயமுனையிற்படிந்தாழ்கித்

தாதவிழ்மலர்ப்பூங்காவிற்றவமுறுவேடந்தாங்கு
மாதினைக்கண்டுமீண்டுமொயன்பாலெய்திச்சொல்வான். 34

இந்திரைதானோவனற்பிரதியோவரம்பைதானோ
சுந்தரியொருத்திதூயயோகத்திற்றுலங்கிநின்றாள்
தந்தியைக்காத்தவீராதசாருகத்தேசமன்னா
வந்துநீகாண்டியென்னமாதவன்மகிழ்ந்துசென்றான். 35

முளரியின்முளையின்முத்தினவிரெனமூரலெய்த
முளரியின்முளைபோலாரமுலையுறநவையில்சித்த
முளரியின்வைத்துட்டன்னினிறுத்திமுள்கூர்பாயு
முளரியின்யோகஞ்செய்யுமுயற்சியைமுராரிகண்டான். 36

வாளுந்துநயநத்தாள்வான்மதியுந்துவதனத்தாள்சீர்
நீளுந்தண்மலரினோதிரிந்ததிலம்பழித்தபல்லாள்
வேளுந்துதவவேடத்தாள்விந்தைநாண்வடிவுமிக்காள்
காளிந்திதன்னைக்கண்டான்காளிந்திநதியிற்கண்ணன். 37

நீதிலாமாதைநோக்கிச்செய்கின்றவரியயோக
மேதினந்திச்செயவாயாருடனையென்ன
யாதவன்மகளாவேனீகணவனையணுகச்செய்யு
மாதவமுற்றவந்தாயென்றடிவணங்கினாள். 38

பாதமேற்பணியுமாதைப்பரிவினாற்கரத்தைப்பற்றி
மாதவன்றேரினேற்றிவானவர்மலர்கடூவத்
தீதிலாவிசயன்வண்மைச்சாத்தகிசேனைசூழ
வேதியர்நிறையுமிந்திரப்பிரத்தத்தின்மேவினாரால். 39

இந்திரப்பிரத்தந்தன்னிலெய்தியேயரிவையோடுங்
குந்தியைவணங்கிவீதிகொடிவிதானங்களோங்கக்
கந்தநன்மாலைகும்பங்கன்னலொண்கமுகுதோன்றத்
துந்துமிமுரசஞ்சங்கந்துடிகைகள்பலமுழங்க. 40

நித்திலம்வயிரநீலமரகதநிறைந்ததூண்கள்
பத்திசெய்மண்டபத்தின்பைம்பொனாசனத்தின்மீதின்
சித்தசனிரதிநாணச்சிறந்தகாளிந்திதன்னோ
டத்தியைக்காத்தவீரனழகுறவிருந்தானன்றே. 41

ஆரணமறையோர்சூழவருந்தவக்கர்க்கனெய்திப்
பூரணாகுதிசெய்தென்றின்புதல்விகந்தரத்திற்சீராய
வாரணங்காத்தோன்கையான்மங்கலநாணைச்சேர்த்தச்
சீரணங்கெழிலாளம்மிமிதித்துத்தீவலம்வந்தாளால். 42

கருந்தடங்கண்ணியானகாளிந்தியுடனுமாய
னருந்ததிவானினோக்கியறுசுவையடிசிலின்பம்
பொருந்திடவமுதுசெய்துபூந்தொடைபுனைந்துபொன்னாந்
திருந்தியகட்டின்மீதிற்சிறந்தின்பத்தமர்ந்தானன்றே. 43

தினகரன்புதல்வியோடுஞ்சில்லியந்தேரிலேறி
யனகன்பாண்டவர்கடன்னைநிறுவியேயணிகஞ்சூழக்
கனககோபுரங்கள்சூழுங்கடிபொழிற்றுவரைதன்னிற்
சினிகவின்புதல்வனான சாத்தகியுடனுஞ்சென்றான். 44

அன்னையர்தமையிறைஞ்சியலாயுதனடியிற்றாழ்ந்து
மன்னவன்வசுதேவன்றன்மலரடிவணங்கியோங்கும்
பொன்னினமண்டபத்திற்சேக்கைபொருந்திடவிதர்ப்பன்பெற்ற
அன்னம்வந்தச்சுதன்றன்னடிதொழுதருகிருந்தாள். 45

சத்தியவாமையெண்குதந்தசாம்புவதியின்பி
னுத்தமனடியிற்றாழ்ந்தேயுண்மகிழ்ந்திடக்காளிந்தி
தத்தைதேவகிதன்றாளினிறைஞ்சிநற்றவமிக்கான
சித்தசனன்னைபாதம்வணங்கினள்சிறக்கமாதோ. 46

தூயதேவியர்கள்சூழத்துலங்குமாமண்டபத்தின்
வீயுறுகுழலினார்கள்வீணையாழிசைக்கவேலை
காயுமான்விழியினார்மெய்கலனுறநடிக்கக்கண்டு
மாயவனிருந்தான்றூயமாமறையோர்கள்வாழ்த்த. 47

காளிந்தி தேவியார் திருக்கலியாணப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 458.

## 84 - வது, மித்திரவிந்தை தேவியார் திருக்கலியாணப் படலம்.

உத்தமவந்திமாராசனெண்ணகர்
மொய்த்தெதிரரசர்வென்னிடமுடுக்கியே
மித்திரவிந்தையாந்திருவைவேட்டரு
ணத்தொளிர்செங்கைநாரணனையேத்துவாம். 1

சாமரைபுரளநற்றருமமோங்கிட
மாமணிக்கலன்கண்மார்பினில்வயங்கவே
காமனையளிப்பவளுடன்களிப்புறப்
பூமனையளித்தவன்பொருந்துநாட்டினில். 2

வேறு.

தவந்தனைப்பகழியாக்கித்தருமமாந்தனுவைக்கோட்டிப்
பவந்தனைத்துணித்துவீழ்த்திப்பாரினிற்செங்கோலோச்சி
யுவந்திமறையோர்போற்றவொருதனிக்குடைக்கீழ்வைகு
மவந்திமாராசன்பெற்றவரிவைவானரம்பைபோல்வாள். 3

சூரசேனன்றன்பெற்றதூயராசாதிதேவி
சீருறுவசுதேவன்றன்சகோதரிசிறப்பான்மிக்க

வீரர்கண்மதிப்பப்பாராள்விறல்வந்திராசர்க்கன்பாம்
பாரிகற்புடையாள்பெற்றபைந்தொடிபவளம்போல்வாள். 4

அத்திரம்போன்றகண்ணாளரவிந்தவதனத்தாளொண்
முத்தெனுநகையாள்கோங்கின்முகையெனுமுலையாள்வண்மை
நத்தெனுங்கிரீவத்தாளோதிமமெனுநடையளாய
மித்திரவிந்தைமேகக்குழலண்மெல்லிடையாங்கொம்பு. 5

அன்னவளெழிலைநோக்கிவந்திமாராசனென்னு
மன்னவன்மகளுக்காங்கேவதுவைசெயபருவம்வாய்த்தென்
றுன்னியிச்சுயம்வரத்திற்கெயதுவீரொல்லையென்றே
யின்னிலத்தரசர்க்கெல்லாந்தூதரையேவினானால். 6

தூதுவர்விரைவினெய்திசசொல்லலுமிருபரெல்லா
மாதரவுடனேதேரினனிகமுஞ்சூழவேகிப்
போதகமிரதம்பாயமாப்படைவரவையமீதின்
மாதவனவந்திமன்னன்வளநகர்கெய்தினாரால். 7

நீலமொண்வயிரமபச்சைநித்திலம்பவளம்பைம்பொன்
கோலநன்மணிகளெல்லாங்குழுமியமண்டபத்தின்
மாலைகண்மாழையாடைவயங்கியவிதானமான்று
மேலவனவிரேபோன்றுவிளங்கியதீபஞ்சூழ. 8

துன்னியமணித்தூணெல்லாந்துலங்கியமண்டபத்தின்
மன்னவரளப்பிலாதோர்மயங்கியேசிற்கும்வேலை
மின்னிடைக்கலாபந்தோன்றமித்திரவிந்தைமேவு
மன்னமுநாணக்கையினலங்கலோடெய்தினாளால். 9

செல்லுயர்பிறைவில்வாளிசெங்கிடைவள்ளையாரம்
வில்லுவங்குமிழ்வேய்கோவிளங்கியகலசங்காந்தள்
வல்லிநற்கதலிநள்ளிவாலொளித்தராசுநேரி
லல்லியங்கமலமான்றவாடகக்கொம்புபோல்வாள். 10

இத்தகையெழிலான்மிக்கயாழினைப்பழிக்குஞ்சொல்லாள்
மித்திரவிந்தைதன்னைநோக்கும்வேல்வேந்தரெல்லாம்
சித்திரம்போலநிற்கச்சிறந்தமின்னலங்கறன்னைக்
கைத்தலந்தன்னில்வாங்கிக்கண்ணன்றன்மார்பிலிட்டாள். 11

தெரியலைமங்கைவாங்கிச்சீதரனுரத்திற்போட
வரசர்களெல்லாநெஞ்சமழறழற்கண்ணராகிக
கரிபரியிரதவீரர்கணகிறந்தவர்களெல்லா
மரியினைவளைத்ததோவினிறையெனவார்த்தாரன்றே. 12

நிருபர்கள்வளைக்கமாயோனொஞ்சிலைவளைத்துவாளி
கருமுகில்பொழிந்தாற்போலசசொரிதலுங்கரிமாவீரர்
தரணியின்மடிந்துவீழத்தசையுறுகுருதிவெள்ளம்
பெருகிடக்கவந்தமாடப்பேய்களுங்களித்தமாதோ. 13

நீறணிகடவுள்கண்ணினெருப்பினாற்புரங்கள்வெந்த
வாறெனவனீகமெல்லாமவனியின்மடிந்துவீழ
நாறுபூங்குழலினாண்மேனனிமயலெழுந்தவேந்தர்
பாறினராசைதோறும்பரிபவந்தொடரவம்மா.

பீதிகொண்டரசரெல்லாம்பிறகிடமாயோன்றேர்மேல்
வீதியினெய்தமாதர்விழைவுறக்கண்ணானோக்கி
மாதவன்வடிவினாலேயிமைக்கிலார்மயங்கிநிற்ப
ஏதமிலவந்திமன்னனெதிர்கொளக்கோயில்போந்தான்.

நவமணியினங்கள்சூழநன்பொனாலிழைத்திலங்கு
முவமையிறூண்களெல்லாமுறவுயர்மண்டபத்தின்
றவர்களெண்சீலமிக்கமித்திரவிந்தைதானுந்
துவரையின்வீரன்றானுந்துலங்கவாதனத்தினுற்றார்.

நெய்யினாகுதிகள்கர்க்கனிறைத்திடநெடியமாயன்
மெய்யொளிர்பவளம்போன்றமித்திரவிந்தையென்னுந்
தையல்கந்தரத்தின்செங்கைதன்னின்மங்கலநாண்சாத்தி
கையினாற்பொரியும்வீசக்களித்தம்மிமிதித்தாண்மங்கை.

வானுயர்வடமீனோக்கிமாயவன்றேவிதன்னோ
டானெய்பாலன்னமாழைக்கலத்தினினமுதுசெய்தே
தேனூறுமலங்கல்சூடிச்சிறந்திடக்கலவைபூசி
மீனூறுங்கொடியோனாணவிழுமியவின்பந்துய்த்தான்.

நிவந்ததோலயுதமம்பொன்னிறையுமாதேரிரட்டி
சிவந்தவாய்மடவார்நானூறிவுளியோர்கோடிசேரா
மவந்திராசன்றானீயவச்சுதன்றேவிதன்னோ
டெவந்திரதத்தினேறித்துவரையினுற்றான்மாதோ.

மின்னிடைப்பவளக்கொம்பாமித்திரவிந்தைதன்னோ
டன்னையர்தாளிற்றாழ்ந்தேயருள்செறிவசுதேவன்றன்
பொன்னடியிறைஞ்சுமாயோன்பொலன்கழற்பணிந்துநின்றாள்
தன்னிகரிலாதசீலவிதர்ப்பர்கோன்றந்தமங்கை.

சேணுறுநளினமங்கைசிமந்தகமின்காளிந்தி
யாடகக்கொம்பாஞ்சாம்புவதியன்பாரவந்திராச
னீடியதவத்திற்பெற்றநேரிழையிவர்களின்பங்
கூடவேவசுதேவன்றன்குமரன்வீற்றிருந்தான்மாதோ.

மித்திரவிந்தை தேவியார் திருக்கலியாணப் படலம் முற்றிற்று

ஆகத்திருவிருத்தம் – 479.

# 85 - வது, நாக்கிணசித்து தேவியார் திருக்கலியாணப் படலம்.

---

மாமகமெல்லா நூறிமறைத்தவர்வருந்தத்துய்ய
நாமகள்கொழுநனானநாவிருநயநனுய
பூமகன்மெலியவேதம்பறித்தகல்புணரிபுகக
சோமுகன்றன்னைச்சேலாய்த்துணித்தவன்புகழைச்சொல்வாம். 1

அவியினால்வேள்விசெய்யுமருந்தவர்மகிழநீளும்
புவியினிற்செங்கோலோச்சிப்புரந்தரன்போலவாண்டு
குவிமுலையார்பல்லாண்டுகூறிடமதியைநேராங்
கவிகையின்னிழலின்வாழ்வோன்கவுசலராசராசன். 2

அளிமிகவவனியாளுமரசர்கோன்பயந்தபாவை
தளவுறுநகையாளாரத்தனத்தனள்பவளவாயாள்
கிளியெனுமொழியாள்சாபநுதலினாள்கெண்டையொண்கண்
ணளினமின்னெழிலையொப்பாணக்கினசித்தாமாது. 3

ஆயவளெழிலைநோக்கியரசர்கோனன்புமிக்க
தூயமந்திரிகடன்னோடியம்புவான்றாவியன்னஞ்
சாயவேநடக்கும்வல்லிதாமரைதுறந்ததைய
லாயவென்மகளுக்கொத்தமகுணனாரறைமினென்றான். 4

வேந்தர்கோன்மொழியைக்கேட்டுவேதநூற்பொருள்களெல்லா
மாய்ந்திடுமமைச்சர்நோக்கியையவுன்மகளுக்கொத்த
காந்தனைக்காண்கிலோமக்கதமுறுவிடைகளேழுஞ்
சாய்ந்திடப்பொருதுவெல்வான்றையறன்கொழுநனென்றார். 5

உரைசெயக்கேட்டவேந்தனுயர்விடையேழும்வென்ற
வரசனுக்கீவன்யான்றனளித்திடுமின்னையென்றே
முரசறையென்றலோடும்வள்ளுவர்முந்தியெய்தி
தரணியாணிருபர்வாழுநகர்தொறுஞ்சாற்றினாரால. 6

முரசறைந்திடலுமின்மேலாசைகண்முந்தவெய்து
மரசர்களிரதமேறியடற்கரியநீகஞ்சூழக்
கரைசெயற்கரியவன்பிற்கடிதினிற்சென்றுபாரின்
வரிசையார்கவுசலன்றன்மாநகரடைந்தார்மன்னோ. 7

ஆயவையெல்லாங்கேட்டவச்சுதன்றேரினேறி
நேயமாம்விசயனோடும்நெடுங்கரியிரதம்வீரர்
பாயுமாவனிகமெல்லாம்பரந்திடவிரைவினெய்தித்
நீண்மயில்கவுசலன்றன்னகர்தனிற்சேர்ந்தாரன்றே. 8

முரணுறுமரசர்மன்னன்முன்றிலிற்பரவலோடும்
வருணமார்கலன்கள்மெய்யின்வயங்கவானரம்பைநாண

விரணியக்கொம்புபோலவிளங்குமிமாடமீதின்
றரணியாள்கவுசலன்றன்றனையடானெய்தினின்றாள்.

அரிவையர்குழாங்கள்சூழவாலவட்டங்கடோன்றத்
தெரிவையர்கவரிவீசத்திருவெனநின்றாடன்னை
விரைவினினரசர்நோக்கிவிழியிமைக்கிலர்கள்பாரின்
வரையுமோவியம்போனின்றார்மயல்பெரிதாகமன்றே.

குளநிறைகொட்டியாம்பன்மலரினைக்குறுகிநோக்கா
தளியலரரவிந்தத்தினைமுந்திடவிவர்ந்தபோன்று
நளினமின்னனையநங்கைநாக்கினசித்துநாட்டம்
வளனுறுவாசுதேவன்வதனத்தின்மடுத்தமாதோ.

கண்டனனையுமெய்தக்களித்திடுமனத்தளாகி
யண்டர்கடுதிக்குமையனடர்விடையேழுஞ்செற்றே
முண்டகமுகையினேராமுலையின்மீதணையானுகில்
விண்டலமதிலென்றுவியுறுமெனவெதும்பிசசோர்ந்தாள்.

மயலுறுமாதின்மீதுவாசநீர்நிரையவிட்டே
யயில்விலோசனியாரேற்றியரிவிடையேழுஞ்செற்றன்
னியல்புறுகொங்கைமீதினணைதுவனென்றலோடுங
கயனிகர்கண்ணிதேறிககண்ணனைநோக்கிநின்றாள்.

ஆயதோர்காலைதன்னினரசனேழ்விடையைவிட்டான்
றீயெழவிழித்துசசெல்லுமவரையேசினந்துநோக்கி
யேயெனுமுன்னமெய்தியிடியெனவதிர்த்துக்கோட்டாற்
பாயவேவெருவிமன்னர்பார்மிசைப்பாறினரால்.

கடுவிடமெனவேயெய்திககாவலரோடப்பாய்ந்த
விடையினமெழுந்துதன்மேல்வெற்பெனவருதலோடு
நெடியவனுருவேழாகிநின்றொருகணத்தின்முன்னர்
கொடியவேழேற்றின்வாலைப்பற்றியேசுழற்றிக்கொன்றான்.

எழுருவாகிநின்றவிடையினையெதிர்ந்துசெற்ற
பாழியம்புயத்தோனுக்குதேவியர்பலரென்றாலுந்
தோழிமீர்கவுசலன்றன்றனியறப்பெற்றுவந்த
வேழைதோளொருவானென்றுமிவனெனவறைந்தார்மாதோ.

அந்தரத்தமரர்போற்றியாடகமலர்களைவ
நந்துதுந்துமிகளார்ப்பநான்மறையோர்கள்வாழ்த்தச்
சுந்தரவிமானமீதிற்றுலங்கிடவானிற்றோன்று
மிந்துநேர்வதனிகையாலலங்கலையெய்தாளம்மா.

அரியுறுமலங்கறன்னையரிவைசீரரிதன்மார்பிற்
சரியுறுகரத்தால்வாங்கியெறிந்திடுஞ்சதுரைநோக்கி
வரிநெடுங்கண்ணார்சிந்தைமகிழ்ந்தனர்மாயோன்றானுந்
திருவுளமகிழ்ந்துநின்றான்றேவர்துந்துமிகளார்ப்ப.

அறனுறுங்கவுசலக்கோனன்பெனுங்கடலினாழ்ந்து
மறையவர்சூழவேகிமாயனைத்தழீஇக்கொண்டேகிக்
குறைவிலாமரகதத்தூண்கோலமார்மண்டபத்தி
னெறியுறுமுனிவர்சூழநேமியோனுடனுஞ்சென்றான். 19

ஆரமாமணியொண்ணீலமணியுறுமாலையெண்ணில்
வேரிமாமலர்கொள்மாலைவிளங்கிடச்சூழநாற்றி
நேரிலாவரிகளேந்துமாதனமீதினீளும்
வாரிமேலிலங்குவானுமங்கையுமிருந்தார்மன்னோ. 20

பங்கயன்போன்றகர்க்கன்பரிவினாகுதிகள்செய்யக்
கங்கையேதிகழ்பாததந்தன்கவுசலராசன்பெற்ற
மங்கைதன்கந்தரத்தின்மங்கலநாணைச்சாத்தி
யங்கியைவலமாய்வந்தான்றாள்பிடித்தம்மிவைத்தான். 21

அரிவைதன்னுடனேமாயனருந்ததிகண்டபின்னர்
நிரைமணியரிவாணத்தினிறையுமோதனம்பாற்றேக்கித்
தெரிமலர்சூடிநானங்கமழ்ந்திடச்செம்பொற்சேக்கை
யிருவருமெய்தியின்பக்கடலிடையிருந்தாரன்றே. 22

ஆனிரையயுதமின்னேரிடையினாராயிரம்பேர்
மானவகோடிவீரர்மற்றதிண்கரிமடங்கோ
டூனமிலிரதமெண்ணூறாயிரமீந்தானென்றா
ரூனுறுவேல்கொள்கையான்கவுசலனுவந்துமன்னோ. 23

ஊக்கமார்கவுசலக்கோனீந்திடவுவந்துமாயோ
னாக்கினசித்தினோடுநலனுறுமிரதமேறிக்
கோக்குலவீரர்சூழவருங்குந்திசுதனோடன்பு
நீக்கமினெஞ்சனாகிநெறியிடையேகுமெல்லை. 24

விடைகளின்வெருவியோமென்னர்கள்மீண்டேயன்ன
நடையினண்மீதினாசைநண்ணிடநெறியிலாதார்
கொடியுறுமிரதங்கைமாக்குரகதம்வீரர்கூடக்
கடகளிறட்டான்றன்னைவளைந்துவெங்கணைபெய்தார்த்தார். 25

அன்னதுகண்டுபோர்த்தனழுகியகாண்டீபத்தைத்
தன்னெழிற்கரத்தின்வாங்கிவளைத்துயர்சாயகங்க
ளென்னியகரிதேர்வீரர்துரகதமடியமாரி
மின்னியேபொழிந்தாற்போலச்சொரிந்தனன்விண்டிக்கெல்லாம்.

தேரறக்கொடியுமற்றசிரமறமுடியுமற்ற
மார்பறத்தாளுமற்றவளையறமுழக்கமற்ற
வேரறக்கலன்களற்றகுரமறவிவுளியற்ற
வாரறப்பேரியற்றமதமறவற்றமைம்மா. 27

எழுந்தனதலைகள்வானினிடைவிடாதாக்கைமண்மேல்
விழுந்தனவரைகள்போலவிஞ்சியகுருதிவெள்ளத்

தழுந்தியவீரதமெல்லாமயங்கரியுடல்களற்றே
கழுந்துகளெருவைபோன்றக்கலந்தங்கண்டிக்கும்வானின். 28

இந்திரன்சிறுவன்வாளிதொடுக்கவோன்றேவப்பத்தா
வந்தரமிசையினாருவவர்கண்மேலனந்தமாகித்
தந்தியையறுத்துமாவினுடல்களைத்தரித்துவீரர்
கந்தரந்துணித்துப்பாருட்செல்லுங்கட்செவியையேல. 29

விசையனெய்விசிகந்தன்னால்வீந்தவெம்பரிகடோவின்
றசையுறுகுருதியாறய்த்தரணியினோடநீளும்
வசையுறமன்னரெல்லாமணிநெடுந்தேரைவிட்டுத்
திசைதொறும்பாறினார்கடேவர்கடிதிப்பமன்றே. 30

வரிசிலைவிசயன்வாங்கிவாளிகள்பொழியமன்னர்
வெருவியாண்டோடநோக்கிவிமலன்புன்முறுவல்செய்தே
தருமலர்பொழியவானோர்சங்குபேரிகைகளார்ப்ப
விரைவினிற்றுவரையின்கண்மின்னுடனேகினானால். 31

சூரசேனன்சேய்தாளிற்றூயநாக்கினசிததோடு
மாரியன்வணங்கித்தாயரடியிணையிறைஞ்சலோடு
மாரனையருளுமாதுமங்கையருடன்றுள்வீழ
வேருறவவர்களோடுமின்பமோடிருந்தானன்றே. 32

நாக்கினசித்து தேவியார் திருக்கலியாணப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - 511.

---

## 86-வது, பத்திரை தேவியார் திருக்கலியாணப் படலம்.

மத்திரவரசர்கோன்பயந்தமாதவப்
பத்திரையுள்குமுன்பசும்பொற்றேரின்மேற்
சித்தசன்சமிக்கமுன்றோன்றிசசார்ந்தருள்
வித்தகனெனநினைவினைகள்பாறவே. 1

வேறு.

சுத்தமாமறைகள்சாங்கியத்தின்றொல்பொருள
கைத்தலக்கனியெனக்காணுங்காட்சியா
னத்துறுவயல்செறிநாட்டையாள்கின்ற
மத்திரன்குலத்தினுட்சுரதகீர்த்திமன். 2

அன்னவன்பயந்தனனன்னமென்னடை
மின்னிடைகழைகடோளயில்விலோசனங்
கன்னறேன்மொழிகவின்பூகங்கந்தர
மென்னவேயிலங்கியவெழில்கொள்பத்திரை. 3

கீதவேழிசையெலாங்கிளத்துமஞ்சுகங்
தீதிலாவுயர்புராணங்கள்சேரவே
யோதியங்குயர்ந்தசிற்பொருளையுன்னியே
மாதவனுதியென் றுணருமாமயில். 4

தூயமாமதுரையிற்றோன் றிக்கங்குலி
னுயர்நாயகன்மனையணுகியெய்தியே
பேயொடுசகடமாசுகம்பெகங்கன் று
தீயவேவதைத்தமால்செயலையுன்னுவாள். 5

தனுவினைமுரித்ததுங்கரியைசசாய்த்ததுஞ்
சினமலிமல்லரைத்தரையிற்றேய்த்ததும்
வினையுறுகஞ்சனைவென் றவீரமு
யினியநல்வீணையினிசையப்பாடுவாள். 6

செருவினைவென் றருப்பிணியைச்சேர்ந்தது
மிரவிநேர்மணியொடுமெண்கனிந்திடு
மரிவையோடமர்ந்ததுமலரிக்கன்பனு
நிருபர்கோனளித்தநேரிழையையுற்றதும். 7

என் றருள்காளிந்தியியற்றுமாதவ
நன்றெனமொழிந்தவணகிலைச்சேர்ந்தது
மன் றமர்செய்துவென் றவந்திமன் றரு
மன் றலர்குழலிதோளணைந்தவண்மையும். 8

விலங்கல்போலெதிர்ந்துமேலடர்ந்தவேற்றினங்
கலங்கவால்பிடித்திழுத்தறைந்தகாலையி
னலங்கலந்தோளின்மீதெறிந்தவாயிழை
யிலங்கவேயணைத்ததுமெண்ணிச்சோர்குவாள். 9

முடிமுகில்பிறைநுதன்முளரிசெங்கண்க
ளடியிடைதோள்கரமதரமார்புய
வடிவெலாங்கவினுறவரைந்துமாட்சியாம்
படமுறநோக்கியேபகருவாளரோ. 10

கருமுகிலனையநின் னுருவங்கண்டியா
னுருகிமெயலறவுற்றணைத்தெனை
மருவவிவ்வோவியவடிவமாகவே
யரியெனையணைதியென் றயருமெல்லையின். 11

கோடியொராழிகைதிகழக்கொண்டல்போ
லாடகவாடையுமணிந்துபங்கயக்
காடெனக்கண்கள்வாயுந்திகால்கர
மோடுறத்தோன் றினன்முராரிமாதுமுன். 12

கண்டனளிருகணீர்கலுழவாரமு
துண்டவளெனவுடற்றடிப்பவேயுவ

தண்டமுண்டருளியவையன்றாளினில்
முண்டகவதனமின்பணிந்துமுன்னின்றாள். 13

நயனநீருறமயிர்பொடிப்பநாரமுற்
றியல்புறவிறைஞ்சியாண்டெழுந்தமங்கைதன்
மயலறவரிதிருமார்பினுற்றணைத்
தயமுறுதேரின்மீதமர்ந்துதோன்றினான். 14

பத்திரைதன்னுடன்பயோததிக்குளி
னித்திரைதுறந்தமானெறியினேகியே
சுத்தநன்மலர்மழைசுரர்கடூவநீ
ளத்திசூழ்துவரையினணுகினானரோ. 15

முத்தினமரகதம்வயிரமொப்பமா
வித்துருமங்களால்விளங்குதூணணி
வைத்துயர்விதானமீவயங்கவேதிகழ்
சித்திரநிறைந்தமண்டபத்திற்சீருற. 16

தாமமோடாடியதரளமாலையின்
காமரோங்கிடநிறைகமலம்பூத்தபோல்
வாமமேகலையர்வணடீபமேந்திட
வேமமார்மடங்கல்களிலங்குபீடமேல். 17

யாதவன்பத்திரையுடனிலங்கிட
மாதவக்கர்க்கன்வந்தெய்திமாமறை
யோதிநெய்யனல்விளைததோமஞ்செய்யநற்
கோதையர்மகிழ்ந்துபல்லாண்டுகூறினார். 18

பாவையர்மகிழ்ந்திடப்பணிலமூதவே
மாவின்வாய்பிளந்துபுட்கிழிததமாதவச
சேவகன்மங்கலநாணைச்செங்கையாற
காவிசேர்நயனிகந்தரததணிந்தனன். 19

பாவகன்றனைவலம்வந்துபாரினின்
மேவியவம்மிமின்மிதித்துவிண்மிசை
தாவியவருந்ததிநோக்கததண்மலர்
தூவினரமரர்துந்துமிமுழங்கவே. 20

சிந்தையின்மகிழ்ந்தரிதேவிதன்னுடன்
தந்தையைவணங்கிநற்றாயர்தாடொழு
திந்துவின்வண்ணனையிறைஞ்சினன்றன்முன்
வந்தடிபணிந்தனள்விதர்ப்பன்மாமகள். 21

சித்தசன்றனைத்தருதேவிபாதத்தின்
பத்திரைவணங்கியபின்னர்ப்பாற்கட
லத்தனோடோதனமருந்திச்சேக்கையுண்
மெத்தையினெய்தியேவிளங்கினாளரோ. 22

நானமொண்ணிமசலநல்லகுங்கும
மேனியிற்கமழவெழில்ரதிவெள்கிடத்
தேனெடுபோல்சொரிந்தென்னச்சீதரன்
மானகுநயனிதன்னொடுமகிழ்ந்தனன். 23

குண்டினபுரத்தாறுகோதைதன்னுட
னொண்டொடியார்மிகவுவந்துசூழ்ந்திடக்
கொண்டன்மின்குழாமொடுகூடச்சேர்ந்தபோன்
மண்டபத்திருந்தனன்மாயன்முனரோ. 24

பத்திரையார் திருக்கலியாணப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் – 535.

---

## 87 - வது, இலக்கணை தேவியார் திருக்கலியாணப் படலம்.

---

ஞாலமெண்பததிரனகரமெய்தியே
வேலொளிர்விசயனெய்விசிகநதப்பிய
சேலறவெய்திலக்கணையைச்சேர்ந்தருண்
மாலடிதொழுதிரும்பிறவிமாயவே. 1

வேறு.

சீருறுநெறிநால்வேதந்திங்கண்மும்மாரியெல்லாம்
பாரினினிறையவாழும்பத்திரராசன்மைந்தன்
பேரியல்புடையவீரனெகியபிரகசேன
னோருறப்பயந்தநங்கையிலக்கணையென்பாண்மன்னோ. 2

கழையினைநிகராந்தோளாள்காந்தளைநிகராங்கையா
ளுழைநிகர்விழியாடேவியோதிமநடையினாள்சீ
ரிழைநிகரிடையாள்செம்மையிலவைநேரதரத்தாள்வான்
மழைமுகிளிகராமோதிவளைவினேர்புருவமங்கை. 3

பங்கயமுகையைப்போன்றபயோதரிபாரின்மேவுங
கங்கையின்சுழியைமானக்கவின்கொளுமுந்தியாள்பொற்
சங்கமாம்பூகநாணத்தரளமார்கந்தரத்தாள்
மங்கையர்திலகாந்தாவிளக்கெனவயங்குமாது. 4

இயல்புறுபுராணமாறுசாத்திரமிவைகளெல்லாங
குயின்மொழியணங்கிளுடானேதிமைக்கொண்டல்வண்ணன்
கயறுறுகடலையோவிக்காசினியெய்திவெண்ணெ
யயிலுவோன்செயலையுன்னிமயலெழவணையிற்சேர்ந்தாள். 5

அலக்கணுற்றயர்ந்துபஞ்சவணையின்மீதயர்ந்துவீழ்ந்த
விலக்கணைதன்னையாதரிருலகையாலெடுத்தணைத்துக்

கலக்கமுற்றிமசலத்தைவிடவிழித்தெழுந்தாள்கன்னி
துலக்குநல்லோவியந்தானுயிர்பெற்றதூய்மைபோல. 6

அரியுறுமிழுதுபோன்மெய்யுருகிடவனங்கன்சாபத்
தரியுறுநாணைவாங்கிவிடுத்தவாசுகங்களுள்ள
மரியவேநொந்துமாலாமளக்கரினழுந்திததூய
வரிசெயறன்னையுள்கியிலக்கணையறைகின்றாளால். 7

தீதிலாசுகந்தங்கொண்டுசெறிநதிடுங்கூனிதன்னை
யேதமிலரம்பைநாணுமியல்புடையுருவமாக்கி
மாதவப்பதிரைத்தேன்வரையுமோவியற்றிற்றோன்றுஞ்
சீதரவடியேன்றன்னைச்சேர்ந்திடர்தீர்த்தியென்றாள். 8

நந்தொளிர்திகிரிசார்ங்கநலந்திகழ்கதைவாளோங்க
வுந்திசால்கைகண்செவ்வாயொளிர்நளினங்கள்பூத்த
கந்தரம்போன்றுநோக்குமிடந்தொறுங்காணநின்றே
யிந்திரசாலஞ்செய்தானிவனெனவியம்பிசோர்ந்தாள். 9

பத்திரராசன்பெற்றபனிமொழிசோரக்கண்டே
கைத்தலநெரித்துமாதர்கண்கணீர்கலுழவந்து
சுத்தவொண்பனிநீர்மெய்யிற்சொரிந்தெடுத்தணைக்கத்தேறு
முத்தமிதனைநோக்கித்துணைவியருரைக்கலுற்றார். 10

கருங்கல்லையரிவையாக்கிக்கடிபொழிலிலங்கைக்கெய்தக்
குரங்கலையுவரிகட்டநிருதனைமுன்னாட்கொன்றான்
வருங்கலைநிறைந்தவிந்துவதனத்தாய்வாடியுள்ள
மிரங்கலையென்றுகூறத்தேறிமின்னிருக்குங்காலை. 11

மனுவெனச்செங்கோலோச்சிவாழ்கின்றபத்திரக்கோன்
றனியறுதவத்திற்பெற்றவிலக்கணைதன்னைத்தூய
தனுவளைத்திலங்குகின்றசலசரமெய்தார்க்கீவ
னெனமுரசறைமினென்றானிகரிலாமன்னன்மாதோ. 12

அரசனீதறையக்கேட்டவள்ளுவரவனியெங்கு
முரசறைந்துரைத்தலோடுமுடியொளிர்வேந்தரெல்லாம்
புரைசெயார்கரிதேர்வீரர்புடைவரவீக்கவெல்லாம்
பிரசமேநாடிச்செல்லும்பெற்றிபோனகரிசேர்ந்தார். 13

பத்திரவரசர்கோமான்பயந்திடவிலங்குகின்ற
வித்துருமத்தின்கொம்புபோன்றமின்னிடையினுடன்
கைத்தலம்பற்றிவேட்கக்கருதியேயிரதமீதி
னுத்தவனுடனுமாயோனுவந்துமாநகரிசேர்ந்தான். 14

நவமணித்தூண்கள்சேரநலனுறுமண்டபத்தி
னவனியினரசரெல்லாமாடையாபரணந்தோன்றக்
கவிகைகள்மதிபோலெங்குங்கவினுறவிருப்பவேதான்
புவியையீரடியாற்கொண்டோன்புகுந்துவீற்றிருந்தான்மன்னோ. 15

துன்னியநவமணித் தூண்டிலங்கியமண்டபத்திற்
பொன்னெடுவரையைப்போன் றவில்லினைப்புவியின்வைத்து
மின்மணித்தாழிதன்னுட்டோன் றுமமீனைசசுட்டி
நன்னிலவரசர்க்காங்கேபத்திரனவிலலுற்றான். 16

இருநிலத்துயர்ந்தவில்லையெடுத்தெழினாணையேற்றி
யொருகணைதொடுத்துநீருளுலாவியகயலையெய்தா
னருவினையொருவியான்றானளிததிடுமெழகான்மிக்க
தெரிவைதன்மருணனென்றுசெப்பினான்பிரகரசேனன். 17

அன்னதோர்காலைதன்னினடையினாலன்னநாணக்
கன்னல்கோஙகரும்புபூகஙகநதரம்வள்ளைகாநதள்
மின்னயிலாரமாம்பல்குமிழ்பிறைவில்லிதெல்லாந
துன்னுமாடகக்கொமபேபோலஙகவைதோன்றவநதாள். 18

மொழியினாற்குயில்களாணமுகத்தினாலிந்துநாண
விழியினாலுழைகளாணவிடையினான்மின்னுநாணக்
குழையினால்வள்ளைநாணக்கொஙகையாற்குரும்பைநாண
வழகினாலரமபைநாணவரசர்கண்மயஙகவநதாள. 19

பரிபுரமரற்றப்பாதசாலமும்வயஙகிக்காட்டத்
தெரிமணிக்கலாபமின்னசசிறநதபொற்கலிங்கந்தோன்ற
விருகரவளையிலஙகவெழின்முலையாரமாடச
சுரிகுழலணியுமாடத்தோடுகாதாடவந்தாள். 20

அரிமலரலஙகல்கையினழகுறவெய்திதோன்றுந
தெரிவையைநோக்கிமன்னர்சிததிரம்போலநின்றார்
கருமுகில்வண்ணமாலைக்கண்டிலககணையாஙகோதை
இருகணோடாவிசிநதையவன்வயினெய்தநின்றாள். 21

மாரன்விற்காற்றாராகிமகதர்கோன்றநதமைநதன்
வீரரெண்விசயனஙகன்சேதிபன்முதலாம்வீரர்
பாரின்வில்லெடுததுநாரியேற்றியேபகழிதன்னால்
நாரமுண்மயிலையெய்துபழுதுறநாணமுற்றார். 22

வீரியர்கையில்வாளிபழுதுறவெள்கிநிற்ப
ஆரியன்சிலைநாணேற்றியாசுகநதொடுத்துத்தாழி
நீரினுளேகிவாளியெய்திடநெடுமீனற்றுப்
பாரினில்வீழதேவர்பன்மலர்தூவியார்த்தார். 23

சங்குமாபணவம்பேரிசசரிதழஙகப்பாரி
னெஙகுநான்மறையோரேத்தவிலஙகுமாதவன்றன்றோளிற்
பங்கயத்திருநேரானவிலககணைபரிவினாலே
வஙகையினலஙகறணையணிநதனளமரர்வாழ்த்த. 24

சேலறவெய்துநின்றதிருயகள்கணவனான
மாலுடன்மறையோர்சூழப்பதிரமன்னன்மாசி

னீலமாம்வயிரம்பச்சைமரகதகித்திலஞ்சேர்
கோலமாமணியார்தூண்கள்கொண்டமண்டபத்திற்புக்கான். 25

சாதிபுண்டரிகம்வெட்சிதளவுகல்லாரம்வல்ல
சோதிசெய்மாலைநாலநவமணிக்கோவைதோன்றக்
கோதயர்தீபமேந்திககுலவுமண்டபத்தின்மீதின்
வேதியர்முனிவர்வேந்தரரிவையர்மிடைந்தார்மாதோ. 26

அலரியின்சுடரைக்காட்டுமொளிர்மணியாதனத்தி
னிலகியநீலநந்தன்றொடெழின்மணியமைந்ததென்ன
வுலகயின்மாயவன்றானிலக்கணையுடனீள்பாரி
னலனுறவீற்றிருந்தானுகர்கடிப்பமன்றே. 27

காதலாமலகம்போலவேதநூல்காட்டுஞ்சொல்லின்
சரதநான்மறையோர்சூழத்தவமுயர்கர்க்கமனெய்திச்
சுருதியான்மொழிந்ததூய்யகும்பமுந்துலங்கவைத்தே
அரிதிருக்கையின்மங்கைகரத்தினிலணிந்தான்காப்பு. 28

மந்திரநவின்றுநெய்யினாகுதிவழங்கவன்பின்
குந்திதன்முன்றோன்மைந்தன்மங்கலநாண்கைக்கொண்டே
யிந்துநேர்வதனியானவிலக்கணையென்னுமாதின்
கந்தரந்திகழச்சாத்தக்கமபினங்கரங்கிற்றமமா. 29

வன்னியைவலம்வந்தெய்திமாதம்மிமிதித்தலோடும்
தன்னிகரிலாதமாயோன்றேவியுந்தானுமாக
மின்னியவடமீன்றன்னைவியந்துறநோக்கிநிற்பத்
துன்னுநான்மறையோராசிசொல்லியேதுதித்தாரம்மா. 30

அம்பொனின்கலத்தினெய்பாலன்னமோடருந்தியேதா
னும்பலின்கோட்டினசேக்கையுற்றரிதிருவுமெய்த
வம்பவிழ்மாலைசூடிமணங்கமழ்கலவைகோட்டி
யிமபரிற்சுரதநூலின்பமுற்றிருந்தானன்றே. 31

வேறு.

கரியினிற்றொகையெழுபதினாயிரங்கவினப்
பரிகண்மற்றதின்சதமடங்கவற்றினிற்பாதி
யிரதம்வாளயில்வீரர்களேழிருகோடி
யரிவைமார்களோராயிரம்பத்திரனளித்தான். 32

பத்திரனிவையளித்தலும்பரமனுமுவந்தே
சித்திரமுயிர்பெற்றதொத்தனையதேன்மொழியோ
டெத்தவனுடன்றாருகன்கொணர்ந்ததேருற்று
மைத்துனனெனுமவிசயனுடனேகினன்மகிழ்ந்தே. 33

சூகரங்கரிசூழ்ந்திடும்பழுவத்தைக்கடந்து
சீகரஞ்செறிதிரையின்மேற்றிமிங்கலம்பாயுஞ்

சீரகரமசழாகியதுவரையிற்சார்ந்தான்
சேகரம்மிசைக்கிரீடமாமணிதிகழ்ந்திடவே. 34

மாயன்றேவியோடெய்திநற்றந்தையையவணங்கி
தாயர்தங்களையிறைஞ்சிமுன்னோடிதாழ
நேயநீடியவுருப்பிணிநெடியவன்றளிற்
றூய்தண்மலர்தூவியேபணிந்தனவுலங்க. 35

மாதவன்றனைதொழுதெழுமுருப்பிணிமங்கை
பாதமீதின்னிலக்கணைபரிவுடன்பணிய
வாதரத்துடனணைத்துளமகிழ்ந்தனள்விதர்ப்பன்
கோதையாகியகுண்டினபுரத்தெழிற்கொம்பு. 36

சித்தசன்றனைத்தருமவள்சிறந்தசாம்புவதி
சேத்திராசிதன்றனையள்காளிந்தியாந்தையல்
மித்திரன்கொடிநாககினசித்துமாவிந்தை
பத்திரன்மகள்சூழ்ந்திடப்பரமன்வீற்றிருந்தான். 37

இலக்கணை தேவியார் திருக்கலியாணப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 572.

## 88 - வது, நரகாசுரன் வதைப் படலம்.

எரிமலைவாரிமாருதங்காளுயுதமயமெழுவகைமதிலு
முரனோடுமெடியநரகனை வதைத்தேயவன்சுதன்முடிபெறவருளி
யரசர்தஞ்சிறைவிட்டவர்கடாம்பயந்தவமிர்தகீதத்தியாழறிந்த
தெரிவையர்பதினாறாயிரம்பேரைமணஞ்செய்ததேவனைத்துதிப்பாம். 1

முரனுடனீரேழுலகுளோரஞ்சமூடிகியெண்டிசைகளைவென்ற
விரணியநயனன்றனைவதைத்துயர்ந்தவெண்கணன்வலாரியோடேத்தத்
தரணியையெயிற்றாலிடந்தருள்வராகமூர்த்திதன்வேர்வினிற்சனித்த
வருணையமில்லானரகனெண்பிராக்குசசோதிடபுரத்திடையமர்ந்தான். 2

நீலமொண்டரளமணிமரகதங்கணிறைந்திடுமாடகோபுரங்கண்
மேலவன்பதத்தினுயர்ந்திடவயங்கும்வீதிகோபுரத்தினின்விளங்கக்
காலயந்தேயுக்கான்வரைநாரங்களையுடனெழுவகையெயிலுங்
கோலமுற்றிடவேவளைந்திடக்கரிமாவீரர்தேர்குரகதநிறைய. 3

வானுறுமுரன்றன்னமைச்சனுய்வயங்கமற்றவன்சுதரெழுவோர்கள்
கரிபரியிரதந்துவாதசக்குரோணிசேனைகளுங்காவலராக
வருணனோடியமன்குபேரனைவென்றுமறமுறுநரகன்வானவர்கோன்
றுருவவெண்கவிகைமணிவரையதிதிகுண்டலமவிரைவினிற்பறித்தான்

அரசர்கள்பதினாறாயிரத்தவரையருஞ்சிறையிருத்தியேயவர்தா
மிருநிலம்வயங்கப்பயந்தகன்னியர்களெண்ணிரண்டாயிரத்தவரைச்

னாவலின்வருமறுவோரொடெய்தியே
தேவகிதன்முனிற்சுட்டிச்செப்புவான். 91

கஞ்சனான்மடிந்தவரிவர்கள்காணென
நெஞ்சினார்துணியறநிறைந்தவன்பினென்
ழுஞ்சராமிவரெனமகிழ்ந்துதேவகி
யெஞ்சிலாவிருதனப்பாலையீந்தனள். 92

சிந்தையின்மகிழ்ந்துதேவகிமினீந்திடு
சுந்தரமூலையினிற்சுரந்தபாலினை
மைந்தர்களருந்திமாசாபமோவியே
யிந்திரைகணவன்றனடியிறைஞ்சினார். 93

மாயனைவணங்கியேமகிழ்வவிஞ்சிய
தாயெனுந்தேவகிதாளின்வீழ்ந்தவ
ரேயெனுமுனர்விமானத்தினெய்தியே
தூயநன்மரீசியைத்தொழுதுசேர்ந்தனர். 94

நந்துறுகரத்தினணகிலினாறுபாற்
சிந்தையின்மகிழ்வொடுமெருந்திதேவரா
யந்தரவிமானமேலடையவீதென்றன்
மைந்தனற்செயலெனமகிழ்ந்துகூறுவாள். 95

ஆதிநீவிமலனீயமலனீயுயர்
சோதிநீபரமனீசுருதிநாதனீ
போதநீயெனக்கெழிற்புதல்வனாகிய
யாதவவுன்பதமளித்தியென்றனள். 96

அன்னையிவ்வாறறிந்தறையவசுதன்
பின்னரென்பதந்தனைப்பெறுதியென்றவன்
மன்னியமாயையான்மறைப்பமைந்தனென்
றுன்னியேமாயனையணைத்துவந்தனள். 97

வசுதேவர் வேள்விப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் – 898.

---

## 92 - வது, கண்டாகருணன் மோட்சப் படலம்.

அந்தணனிலன்மாமகங்கள்செய்துயர்ந்தவறிஞன்றன்புதுப்பிணயாக்கை
தந்தனமுதுசெய்தருளெனக்குநதம்பிக்கும்வீடுதாவென்று
வந்துநின்றுடித்துதிசெயுங்கண்டாகருணனோடிளவலுமகிழச்
சிந்தையினுவந்துதன்பதமளித்ததிருவினாயகனடிதொழுவாம். 1

நவமணியினங்கள்வயங்குதூணணிகணலனுறுமண்டபமிசையின்
கவினுறுதவரியசைத்திடக்காயாமலரெனக்கருமுகிலெனவே

யுவமையில்படிவமொளிரவீற்றிருந்தவொருதனிமுதல்வனையுற்றுத்
துவரிதழ்வாயாளுருப்பிணிமுதலாந்தேவியர்தொழுதிவையுரைப்பார். 2

துனியறவிருளையொருவுமென்றினைப்போற்சுருதிநூனெறியினையெய்து
தனயரையெமக்கின்றருளுதியென்னநகைத்துயர்சக்கரந்தரித்தோ [ந்
னணமெனுநடையீரருந்தவம்புரிந்தேயரனிடைவரத்தினைப்பெற்று
மனமகிழ்ந்திடுநற்புதல்வரைத்தருவனென்றுமண்டபமிசைவந்தான். 3

தாலகேதனமன்சினியருள்புதல்வன்சாத்தகிசாரணன்சடனற்
சீலமார்குணததனிவர்களைநோக்கித்திறலுடைநேமியனுரைப்பான்
காலனேயனையபவுண்டரீகன்றனடர்ந்திடாவகையிவண்காமி
னுலமேநுகருமரனிடைவரங்கள்பெற்றியான்மீள்வனென்றறைந்தான். 4

திருமகள்கொழுநன் மொழிந்திடக்கேட்ட சினியருள்சாத்தகிதிறல்சே, ரரனுடனிமையோர் மகபதிமுதிகி யடுசினததுடனமர் பொரினும், வரிசிலைவலததாற் றடைசெய்தீணடெதிரு மொன்னலர்தங்களை வதைப்பன், கருமுகில்வடிவாய் போதியென் றுரைப்ப மகிழ்ந்தரிகருடன்மேற். சென்றான். 5

மாயவன்கலுழனமிசையினிற்சென் றுவதரிகாசிரமத்தினுறவே
தூயநன்முனிவரனைவருமாசிசொல்லவாண்டவர்களைத்தொழுது
மீயுயரலரிகுடகடலிடையின்மறைந்திடவிழுமியமுனை
யாயமாந்திமந்தாகினியுடனேயமர்ந்திடுங்கூலத்தினடைந்தான். 6

தூயநாதனைதன்னெஞ்சினினினைத்துத்துலங்கியயோகததினுயர்ந்த
மாயவனதியின்கோட்டுவாலுகததின்வயங்கிடவிருந்திடும்போழ்தி
னேயமோடரனைநினைந்துபல்லாண்டுநெடுந்தவம்புரிந்திடுமேபூதன் [ம்
சீயமானுழுவையடர்ந்திடும்வனததிற்சேர்ந்தவண்வருஞ்செயன்மொழிவா

அரிதிருப்பெயரைக்கேட்கலாகாதென்றறைந்திடுகண்டைசேர்செவியன்
பரிவுடனரனைநினைந்துபல்லாண்டுபெழுவதினருந்தவஞ்செய்ய
வெருதினினிலங்குமிறையவணங்கெய் விருகையாற்றொழுதவனெனக்கு
பரமநீயழியாப்பததினையருளென் றுரைததிடவுமாபதிபகர்வான். 8

இருநிலமமரர்பதிதனபதிதன்னகரிவையேதுவேண்டிடினுந்
தருகுவனெனலுமிசைகிலானலரிவெயிலினுற்றபிததவன்றனக்குப்
பருகுநீர்கொடாதிங்கெண்ணையயளிததாற்பயனிலைபரமநீயெனக்கே
யருளழிவிலாதகதியினையெனவேயரியருளுவனெனவகன்றான். 9

அரியுயர்கதியை யளிப்பனென் றுயர்ந்த வரனிவைமொழிந்திடக்கேட்டே, யிருசெவியதனி னிலங்குகண்டைகளை யிமைப்பின்முன்னிருகையால்வாங்கித், தரையினிலெறிந்து சகாயனுய்வயங்குந் தனபதிக்கிவையெலாஞ்சாற்றப், பரிவுடனவனு முராரியேயழியாப் பதந்தருவானெனப்பகர்ந்தான். 10

தூயவெட்டெழுத்துந்துவாதசாக்கரமுஞ்செவியிடைச்சொல்லியேதுலங்
மாயவன்றுவராபதியின்மன்னவனுயவயங்கியவாறெலாமறைய [று

வாயவைக்கேட்டுமகிழ்ந்திடுங்கண்டாகருணன்மால்பெயரெலாமறைந்து
பேயினஞ்சூழப்பெருவரைபோலப்பிறங்கியபழுவத்திற்சேர்ந்தான் 11

வேறு.

பேயினர்சுற்றினர்பறைகளடித்தனர்பிரியாத
நாய்கள்குலைத்திடவெங்கணுமோடினர்நலனில்லா
மீயுயர்வானம்வெடிப்புறவார்த்தனர்விறலோடுஞ்
சீயமொடேகரியுழுவைவதைத்தனர்சினம்விஞ்ச. 12

தீபங்கரைத்தனர்நரரைவதைத்தனர்செயிர்விஞ்சுங்
கோபமனத்தினர்வளைகள்முழக்கினர்கொடிதாய
பாவமிகுத்தவர்மயிடம்வதைததனர்படிமீதிற்
சாபம்வளைத்தனர்கிருடிமடித்தனர்தழலம்பால். 13

கருவரைபோலநடந்திடுகண்டாகருணன்று
ணிருநிலமிசையினிலங்கியவேள்விசெய்தியல்பாரு
மருமறையோனைவதைத்தொருசூலத்தவனுக்கை
யுருவவெடுத்தனனலகைகள்சுற்றிடவிடமொப்பான். 14

மரைகரியரியையிழுத்தலகைக்குலம்வரவாயாற்
பருகினனிருகையினுதிரங்கிறைத்துயர்படிமீதி
னெரிநயனத்தொடுகுடறசைதின்றெயிறிலகச்சீ
ரரிகரிபரமபுராரியெனுஞ்சொலறைந்தானால். 15

ஆனைவதைத்தொருகொம்புகைபற்றினனரைமீதி
னூனிறையுங்குடர்சுற்றினனீரல்களுண்வாயன்
கானிடையுற்றெரிர்கன்றுகண்மேயத்துயர்துவரைக்கே
மானிடனாகியவாமனனேநமவென்பானால். 16

கொலைபலசெய்தவனேமிகுபாவியெனக்கூறும்
நலனுறுமறையெனவோதுவர்நான்வதைசெயவேணு
னிலமிசையிவ்வினைநீக்குதிநேமியவென்றேமான்
றலைநரர்குடறசைதின்றுதருக்கிநடந்தானால். 17

மாதவனேநமவென்றுயராவைவதைத்தேநற்
சீதரனேநமவென்றரியின்பிசிதந்தின்றே
யாதியசஞ்சலவற்புதவசசுதவெனவோதிச
சோதிவயங்கியதுய்நதியின்னிடைசூழ்ந்தானால். 18

சுற்றியநாய்களையோட்டுமினென்றுரைசொல்லாமுன்
நற்றியமாலைநினைந்துநதிக்கரையிடமெய்தி
பற்றியமாகரிகோகெள்பலசவமெல்லாமுக்
குற்றமிலந்தணனற்பிணமோடியாகுலைவசெயதான். 19

அறையின்விசித்திடுகுடர்கிலன்னைவத்தனனன்போடே
விரைவினினீருநிரபாற்றுனிசெய்குலையின்மீதிற்

றரையினிருந்தரிதாளைநினைந்துயர்முகில்வண்ண
பரமவிராமமுராரிபராபரநமவென்றான். 20

இலகியதீவிகையெண்ணெயினெண்டிசைதொறுமேற்றி
யலகைகளோடிடவேயரிதன்னையரிசசித்து
நிலமிசையிற்குவைசெய்தசவங்களினெடிதாய
பலகரிமயிடமுடங்குழையெண்குபடைத்தானால். 21

தூயவெழுத்திருநாலுதுவாதசமிவைநெஞ்சி
னேயமொடேயிருகைசிரம்வைத்துநினைந்தேதா
னாயமுராரியசஞ்சலவற்புதவுயர்சோதி
மாயவநாரணவென்றுசெபித்துமகிழ்ந்தானால். 22

வேறு.

உம்பரின்குடரினையோகவட்டையா
யம்பரந்திகழ்கின்றவரையினவீக்கியே
வம்பவிழ்துளவணிமார்பின்மாயனை
நம்பித்தன்னயனநீருகச்செபித்தனன். 23

அருவினையகன்மணிக்கருணனன்புட
னிருநயனத்தினைமுகிழ்த்தியேயிறைக்
குரியவெட்டெழுத்தினையுள்கத்தோன்றினான்
பிரமனையுந்தியிற்பெற்றவெம்பிரான். 24

தண்டுயர்சார்ங்கம்வாள்சங்குசக்கரங்
கொண்டொளிர்முராரிகோலந்தனெஞ்சினுட்
கண்டுகண்விழித்தலுங்காணகிலாமையா
லெண்டிசைமுற்றவுமெழுந்துநோக்கினான். 25

நவமணியணிமெயினலங்கொண்டோங்கிட
வுவமையினதிக்கரைமிசையினுற்றமா
துவரையின்மன்னனைக்கண்டுதூயனா
மவனிவனாமெனவாடிப்பாடினான். 26

இருகணீரிருநிலநிறையவெய்தியே
யரிதிருவடியிணைவணங்கியார்வமோ
டுருகிவெஞ்சூலத்தாலுருவக்குத்திய
சரியிலாமறையவன்றனைமுன்வைத்தான். 27

தவர்களெண்மறையவன்றனஞ்செய்தநல்
லவியுறுமகங்கள்செய்தறிஞனாகிய
விவனலப்பிணந்தனையமுதுசெய்கென
வுவமையின்மாதவனுற்றுநோக்கினான். 28

கொலைபலசெய்திடுங்கொடியனாகிலும்
பொலனுறுமென்பெயர்புகன்றசெம்மையா

னலரிகாணிமமெனவினையகன்றிவ
ணலனுறுமெனவரிநவிலலுற்றனன். 29

உனக்கியான்றரும்வரனுரைத்தியென்றலு
மெனக்கழியாப்பதமீகுவாயென
மனக்கடுவினையகல்பவனுரைக்கமால்
முனிக்கணம்வியந்திடமொழிகுவானரோ. 30

கந்தநாண்மலருளோன்காலுணைப்பதி
தந்தனெனககண்டாகருணன்சாற்றுவா
னிந்திரைகொழுநவப்பதியையென்பிறேன்
றெந்தகன்றனக்கருளென்றுசெப்பினான். 31

என்றவனுரைத்திடவிறைவன்கூறுவா
னுன்றனையேலவேயும்பியென்றன்மே
லொன்றியவன்பனேவுரைத்தியென்றலும்
புன்றொழிலொருவினேன்புகல்வதாயினான். 32

தொந்தகனுகியவெம்பிசீரிலாப்
புந்தியினுன்றன்மேலன்பிலன்பொருந
தந்தியைவதைத்தருடலைவவென்றலு
நந்தகோபன்சுதனவில்வதாயினான். 33

என்னலனறிகிலாயெனினின்முன்றேனெனு
முன்னுடனன்பனேவுரைத்தியென்னவே
பன்னகப்பாயலாயபரிவிலாயெனன்மேற்
பின்னவனெனக்கண்டாகருணன்பேசினான். 34

என்னையுமுன்னையுமெள்கும்பின்னவ
னின்னவில்கதியுறவெக்குணத்தினான்
மன்னுவிப்பேனெனமாயன்கூறலுந்
துன்னியதுனிதுணித்தவன்சொல்லுவானரோ. 35

அனுசன்மேலன்பினனழியாயென
மனமகிழ்நதெழின்மலிமாலென்பத்தர்க
ளினிமையாயருள்வைத்தாலியாவராயினுந
துனியகன்றுயர்குவரென்றுசொல்லுவான். 36

நீயுமுன்னனுசனுகிகரிலாதொளி
ராயிரங்கண்ணினனகரினன்புடன்
போயமிர்தருந்தியப்போகந்துய்த்தபின்
றூயவென்பதியெய்தித்துலங்குவீரென்றான். 37

சுந்தரன்மொழிந்திடத்தொழுதகையனை
யிந்திரவிமானத்தினேற்றித்தம்பியோ
டந்தரதுந்துமிமுழங்கவாய்மலர்
சிந்திடத்தேவர்தம்முலகுசேர்த்தனர். 38

கடகரிகாத்தமால்கருணன் றன்னுரு
விடர்கெடத்தேவர்தம்முருவமெய்தியே
யுடலொடுந்தேவர்தம்முலகமுற்றிட
வடதிசைக்கணுழன்மேன்மாயனேகினான். 39

கண்டாகருணன் மோட்சப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் – 937.

## 93 - வது, கயிலாசயாத்திரைப் படலம்.

பூதலந்தனிற்பிறந்தைம்புலன்கள்செய்
வேதனை யுவரியின்விழுந்தெழுந்திரா
தேதமாமனிதர்களிடரொரீஇயுய
மாதவனடியினைத்தொழுவம்வம்மினோ. 1

உயர்விசும்பமரர்களுவந்துபோற்றவே
யியல்புறுதிகிரிகோடிருகையேந்திவான்
புயல்வணன்ககபதிபுயத்தின்மீதெய்திக
கயிலையினருகிலங்கோடைகண்டனன். 2

ஏனமான்வல்லியமெண்குகேசரி
யானையீதிவையெலாம்வயிரமற்றறுங்
கானநாரேசனைநீளமாங்கவின்
மானசவோடைமாவனசமான்றது. 3

விரைபுரையலர்மலர்விண்ணினோங்கவே
கரையினிற்கவின்கொள்காவினங்கள்சூழ்ந்தது
பிரமனோர்சிரசினைக்கிள்ளிப்பின்னுகன்
சுரர்தொழுதிருந்திடத்துனிகளற்றது. 4

இமவரைமனனருந்தவத்திற்பெற்றிடு
முமையெனுமணங்கினையுருத்திரப்பிரா
னமரர்களுதித்திடவதுவைசெய்தவன்
சமனின்மாமுனிவரோடிலங்கச்சான்றது. 5

மாவுறுவேத்திரம்வளைந்தமாண்பின
னீடியதவஞ்செய்துரிகரினக்கனை
நாடியங்கிருடிகள்கயிலைநண்ணிய
வோடையினுவணன்மேன்மாயனுற்றனன். 6

மரவுரியுடுத்தவன்சடைகள்கட்டியே
யரனெழின்மந்திரமமைந்தநெஞ்சினோ
டிரவுநன்பகலுமாண்டிடைவிடாமலே
சரணியையிடந்தவன் றவஞ்செய்தானரோ. 7

ஓமவிந்தனந்தினமுவணனீந்திட
மாமலர்பறித்துவண்டிகிரிகல்கிடக்
காமரொண்குசப்புலுங்கட்கமீயவான்
பூமியெண்டிசையெலாங்காத்தபொற்சஙகு. 8

தீதிலாக்கதைபரிசாரகஞ்செயத்
தாதலூழியத்தினைச்சார்ங்கம்பண்ணவே
சீதரன்றுவாதசவருடஞ்செல்லவே
மாதவஞ்செய்தனன்மண்ணின்மீதரோ. 9

மாயவனருந்தவஞ்செய்யவானவர்
நாயகனுளைகமனமனம்நாதனே
டேயெனுமுன்னமாண்டமாரெய்தவே
தூயமாமுனிவர்கள்பலருநதுன்னினர். 10

நேயமோடருந்தவஞ்செய்துநீடிய
தூயமாயோகிகடனக்குநதோன்றலா
மாயனீதவஞ்செயுமாயமேதென
நோயகன்முனிவர்கணுவலும்வேலையின். 11

வேறு.

வானதிபிறைவெண்கூவிளைகடுக்கைகரந்தையோடெருக்கலர்மத்தம்
பூனிறைசடைகளசைந்திடநுதலினழல்விழிபொருந்திடப்பஞ்ச
வானனந்திகழவுழைமழுக்கபாலமழல்கரத்துறமலையரையன்
மானிடதிலகக்கொடிகுடையயஙகவரனுயர்விடையின்மேல்வந்தான்.

உரககங்கணஙகையிலிலஙகிடச்சூலமொளிவிடவுமாபதிவிடைமேற்
சரியிலாப்பவளக்கிரியெனவரவேசஙகொடுதமருகமுழஙக
மரவுரியுடுத்தசதமுகன்குண்டோதரன்றிரிவாகுமாவனுவோ
டரிமுகன்பஞ்சவாகுவெணணீற்றையணிந்தவரன்புடனடைந்தார். 13

தீர்க்கரோமனனுன்னதஙகிசன்சிதானனன்சதக்கிரீவன்சினமிகுத்த
தீர்க்கலோசனன்குமித்துவன்விருபாக்கன்றிறன்மலிவாகுகன்சிறந்த
தீர்க்கவாகுக்கவேததிரன்பாவவததிரனறூலநாவலன்சீர்
தீர்க்கமாஞ்சிகையோன்சிததிரகாயவததிரனிவர்களுஞ்சென்றார். 14

கதமிகுகண்டாகருணரோடெண்ணில்கணஙகணக்கினதினராகி
முதுகினிற்சவத்தைச்சுமந்துசெஙகுருதிபருகிவெமமூளைகணுகர்ந்து
புதியதாம்பிணத்தையயிலினூற்குதஇயெடுதது நற்பொறிகலிநயனர்
மதிவளர்சடையோனிருமருஙகடாந்துவானவர்வெருவுறவந்தார். 15

குடர்மலிமாலைகபாலமார்மாலையசைநதிடவயிரவர்கொடிதா
மிடியெனவதிர்த்துத்தமரகமுழககியிருமருஙகினுமிடைநதெயதக்
கொடிகுடைகவரிவயஙகிடவிபுதர்குழாநதுதிசெயதிடத்தவள
விடையினிலஙகியுமாபதிவரலும்வியந்தரிதொழுதிவைநுதிப்பான்.

வரையினைத்தனுவாய்வளைத்தருண்முதல்வாநமவுனைமதிக்கிலாவசுரர்
திரிபுரமெரித்தசிவாநமவிந்துதிகழ்கின்றவேணியாய்நமவே
கரியுரிதனைப்போர்த்தருளுவாய்நமவேகறைமிடற்றிறைவனேநமவே
யரகராநமவேபசுபதிநமவேயந்தகாந்தகநமவென்றான். 17

சீதரன்பரிவோடிவ்வகைதுதிப்பச்சிறந்திடுமிந்துசேகரன்றான்
பூதலமிசையிற்சருகுகால்புனலைப்புசித்தயர்ந்தழலிடைப்பொருந்தி
மாதவமுயல்வோர்க்ககப்படாதுயர்ந்தமாயநீதவஞ்செய்மாயையினை
யோதுதியெனவேமகிழ்வுடன்மொழிந்த வுமாபதிபின்னருமுரைப்பான்.

தரையினினரசர்குலத்துதித்தவன்போற்றனயர்கள்பெறத்தவஞ்செய்
பிரமனுன்மதலையவனுலகடங்கப்பெற்றிடும்பிதாமகனன்றோ [தாய்
திருமகள்கணவவுணரொருமாயஞ்செயகுலைவநீயெனச்சிரித்தே
யரனுளமகிழவிருகணானோக்கியரியுடனிம்மொழியறைவான். 19

நேயமோடியோகமுலப்பிலாவருடநிறையயாணிற்கும்வேலையிலே
ஆயிரநயனனமரர்கண்மொழியாலடர்ந்தெனைச்சேருமன்மதனைத்
தீயுறுவிழியான்முனிந்துயானெரிப்பத்தேவர்கள்வேண்டிடவன்றே [ன்.
தூயவவுனக்குச்சுதனெனநிலத்திற் றோன்றுவன்வேளெனச்சொன்னே

முன்னம்யானறைந்தமொழியினையறியாதவர்கள்போலருந்தவமுயன்றாய்
பொன்னெடுவரையோடுலப்பிலாவுலகமுதரத்திலடக்கியபுனிதா
வுன்னைநீகரந்துமனிதர்போற்சுதரையுவந்துநீபெறத்தவஞ்செய்தா
யின்னல்கொளொருவவுயர்பதங்கண்டாகருணனுக்கீந்தனையென்றான். 21

ஆழிசென்னெறியைத்தரவருகெனமாவருந்தவம்புரிகுவார்போன்றங்
கேழுநாட்டருப்பைமிசையமர்ந்தயமனெயதிலானெனமுனிந்தெழுந்து
சூழும்வாரிதிநீர்சுவரிடக்கணைகள்சொரிந்தவன்வெருவியுன்பதத்தில் [ன்
வீழவேவரம்வேண்டுவதுபோலெனையும்விரும்பினாயெனநகைத்துரைப்பா

செயலுறப்படைக்கத்திசைமுகனாகிச்சிறந்திடவளிக்கரியாகி
யியல்புறத்துடைக்கயானுமாயத்தோன்றியெம்மையுநின்னிடைக்கரந்து
கயவர்கட்கியாங்களளித்திடும்வரத்தாலவரெம்மைக்கடிந்திடும்போதத்
துயரறவவரைவதைத்தவர்தமக்குன்றலங்கியகதியினையருள்வாய். 23

சென்னியோகநிற்குஞ்சிசீமூதந்தினகரனிந்துகண்ணெண்டிக்
கின்னலில்செவிவிண்ணாபியொண்சிந்துவயிறுநற்சகனமூரோமங் [ந்
துன்னுபாதவங்கணயனமுமுகிழ்த்தலிராப்பகல்விழித்தலாய்த்தோன்று
தன்னைநேர்பிறிதிலிறைவநீதவஞ்செயமயக்கினைச்சாற்றுதியென்றான்.

உன்னிடத்தயனோடனையுதவுகையாலோதுவர்கேசவனெனவே
துன்னியவினைகளறுத்தரிக்கையினாலரியெனத்துலங்கினாயயத்துண்
மன்னியசெயலின்பொருளினானாராயணனெனவயங்கினையுயிர்க
டன்னினீயுறையுந்தன்மையால்வாசுதேவனும்பெயரினைத்தரித்தாய். 25

மறைகளுன் னாவின் மலிந்திடுஞ்செயலால்வண்மைசேர்கோவிந்தனானாய்
நிறையுமெஞ்ஞானேந்திரியங்கடனக்குநீயிறையாகியபொருளா
லறைகுவரிருடிகேசவனென் றுன்னையளப்பின் மூவுலகுறவளர்ந்த
திறலினாற்றிருவிக்கிரமனென் றுனையேசெப்புவர்சிறந்திடுமுனிவர். 26

ஏசில்சூக்குமனீயாதலி லுன்னை யியம்புவர்வாமன னென்றே
யாசினுளமிழ்த்தியடருமைம்புலன்கடன்னைநீயகற்றிடுஞ்செயலால்
மாசிலாமதுசூதனனெனவுரைப்பரெவர்க்குநீயுயர்ந்ததன்மையினா
லீசனென் றுனைத்தானறைகுவர்மறையோடிலங்கியவுபநிடமுணர்ந்தோர்

சகலமந்திரத்தினதிகமாயிலங்குபிரணவநீசதுர்மறைக்கு
ணிகரில்சந்தசுக்குள்வயங்கியகாயத்திரியுநீநிறைந்தவக்கரத்து
ளகரநீயுயர்ந்தவுருத்திரர்தமக்குளரனெனுமியானுநீயாகும
பகவனீதிசைக்குளமர்ந்திடும்வசுக்களெண்மரிற்பாவகனீயே. 28

பாதவந்தனுட்பிப்பிலநீயேபன்னகந்தனில்வாசுகிநீ
யேதமின்முனிவர்தன்னினாரதனீயெண்டிசைப்பாலரினளகை
நாதனீயயதத்துள்வருணநீநதியுட்கங்கைநீநலனுறுவரையின்
மீதுறுகனகவிலங்கனீயொளியுள்விசும்புறுகதிரவனீயே. 29

தசனலப்பிரமர்தமக்குளின்வயங்குந்திசைமுகனீவிபுதர்க்குள்
வசையிலாப்புகழ்சேர்வலாரிநீமருந்துளமிர்தநீகுளிர்ப்பினுண்மதிநீ
யசுரர்கடனக்குட்பிரகலாதனுநீயதிகதேவதைகளின்மிருத்த
சுசியுநீயுயர்ந்தபதியினினவயங்குஞ்சோதிநீயாதியுநீயே. 30

அண்டமெண்ணனந்த கோடியுனகட்டிற் றோன்றியேமீளவுமடக்கு, முண்டகமடந்தை கொழுநனேயென்று மொழிந்தரனமுனிவரை நோக்கி, யெண்டவரறிமி னிவனலாலிறைவே றிலையீதுண்மையா மிவன்றான், மண்டனிற்பிறந்து மயக்குமாயையினின் மருண்டிடாதுய்மினென் றுரைத்தான். 31

கறைமிடற்றரன்றானமொழிந்திடக்கேட்டுக்களித்திடுமெருந்தவரெல்லா
மறையையுமயக்கிக்கரந்துறைகின்றமலர்மகணாயகன்றன்னை
யிறைவனென்றியாங்களறிந்துயும்வண்ணமிதவுபதேசநீசெய்தாய் [ன்.
பிறையணிசடிலவெனத்தொழுதிடவேபினாகன்முராரியைத்துதிப்பா

கேசவநமவேநாரணநமவேகிளரொளிமாதவநமவே
மாசறுசுடர்க்கோவிந்தனேநமவேவண்மைசேர்விண்டுவேநமவே
வேசறவுயர்ந்தவெழிலுறுமதுசூதனநமவிடரினையகற்றுந்
தேசுறுதிருவிக்கிரமனேநமவேசிறந்திடுமெவாமனநமவே. 33

சீதரநமவேசிறந்திடுமிருடிகேசனாந்தேவனேநமவே
யேதமில்பதுமநாபனேநமவேயெழில்கொடாமோதரநமவே
போதனைப்படைத்தபுனிதனேநமவேபொலன்கொள்பீதாம்பரநமவே
யாதியாம்பரமநமவெனத்துதித்தேயரனுயர்கயிலையையடைந்தான். 34

அரனிவைதுதித்துக்கயிலையையடையவலாரியோடருந்தவரெல்லாம்
பரிவுடன்முராரிதனைத்தொழுதேத்திப்பன்மலர்பொழிந்தவரேக
வரிமகிழ்வுடனுங்கலுழன்மீதேறியாழியோடைம்படையேந்தி
மருமலர்மலியும்வதரிகாச்சிரமத்தெய்தினன்முனிவர்கண்மகிழ. 35

வதரிகாச்சிரமத்தொருதினமிருந்துமற்றைநாண்மலர்மகள்கொழுந
னெதிரின்மாமுனிவர்குழாங்களையிருத்தியிலங்கியககபதிபுயமேற்
புதுமலரமரர்பொழியவந்தரத்திற்றுந்துமிமுழங்கிடப்புலஞ
ருத்திசூழகழாரொளிகொளுந்துவராபதியினினடைந்தனனுவந்தே. 36

மாயனன்றுவரையடைந்தெழிற்றந்தைமலரடிவணங்கிமுன்னோனைத்
தாயரைப்பணிந்துமகிழ்ந்திடவுயர்ந்தசாத்தகிமகிழ்ந்துதாளிறைஞ்சத்
தீயுறுமெழுகுநிகரெனவுருகுந்தேவியருருப்பிணிமுதலாந்
தூயமங்கையர்களிருகணீர்நிலத்திற்றுளிகொளவடிமிசைதொழுதார். 37

தவாவலிமலியுங்கலுழன்மீதுயர்ந்தசங்குசக்கரந்தரித்தவனைத்
துவாதெசவருடம்பிரிந்தடர்விரகத்துனிக்கடலழுந்துதேவியர்க
ளவாவெலாந்தணியவரிபதினாறாயிரத்துநூற்றெட்டுருவாகித்
திவாவுடனிரவுமொருவிலனாகிச்சிறந்தினிதிருந்தனன்மாதோ. 38

கயிலாசயாத்திரைப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் – 975.

---

## 94 - வது, பவுண்டரன் வதைப் படலம்.

கறைமிடற்றரனைநாடோறுங்கமலமாயிரங்கைகொடுபூசியாக்
குறைபடத்தனதுவிழியிரண்டுபறியாவருச்சனைதொடுக்கவே
யிறைவன்முந்திவரநாரணன்வடிவுபெற்றுநற்றுவரையெய்தியே
பறையறைந்துபவுண்டரன்றனுடறுணிசெய்மாலினடிபணிமினே. 1

தூயபுண்டரிகநாடன்வானினமர்சுரர்களும்வெருவுதிறலினான்
பாயுமும்பல்பதினாயிரத்துறுவலத்தினாலுறுபவுண்டரன்
னேயம்விஞ்சியமனத்தினோடுபசுபதியைநித்தலுநினைந்துதா
னாயிரங்கமலமலர்பறித்தவனருச்சியாமகிழுநாட்டனின். 2

ஒருதினந்தனிலிரண்டுவாசமலர்குறையவேயுயர்பவுண்டரன்
பரிவுடன்றனிருவிழிபறித்துமகபூசைபண்ணவரனெய்தியாண்
டிருநிலத்தின்மிசைநீபகர்ந்தவரமீவனென்றுரையியம்பிட
வரியுருத்தருதியென்றுகூறியிமென்பனுக்கிவையறைந்தனன். 3

கோலமாயன்வடிவங்கொடென்னபயனென்றுகூறுமுமைகொழுநனைச்
சீலமில்லவனிறைஞ்சியவ்வுருவமீதியென்றுதுதிசெய்திட
நீலகண்டனுநகைத்துமால்வடிவுபெறுதியென்றுரைநிகழ்த்தியே
சூலமங்கையினிலங்கவெண்கயிலையெய்தினன்சுரர்கள்சூழவே. 4

நீலகண்டன்வரமீயமால்வடிவுபெற்றுநீதியில்பவுண்டரன்
கோலமுற்றிடுகெவுத்துவங்கனகவாடைகுற்றமில்கிரீடமின்
னாலுசெங்கரமிலங்கவாழிவளைநாந்தகங்கதைவினண்ணிடச்
சீலமுற்றகலுழன்றன்மீதினெழிறிகழவேதிரியுநாட்டனின். 5

முரசுபேரிகைமுழங்கவேதியர்களாசியெங்கணுமொழிந்திடப்
பிரசமென்மொழிமடந்தைமார்கவரிவீசவேபெருமையுற்றிடு
மரசர்சூழவரியாதனத்தினிடையரியினாடைதிகழரியெனும்
வரிசையோடுயர்பவுண்டரன்னினிதிருக்கயாழ்முனியும்வந்தனன். 6

வந்தயாழ்முனிவனாசிகூறியிடமாயவன்வடிவுபெற்றவன்
சிந்தையின்மகிழ்வினோடுமோதவவிருததியென்றுரைகள்செப்பிவா
னந்தரந்திசைகளெங்கணுந்திரியுமறிஞநீபகர்தியென்னையே
நந்துசெந்திகிரிதிகழுமாலெனவுரைப்பரோவெனநவின்றனன். 7

மாயன்யானெனவுரைப்பரெண்டிசையினோடுமெண்ணினுறுமவரெலா
மாயனாணவிழிகுலனுமாயனெனவவனிமீதுதிரிகின்றன
னேயெனுமுனர்வலாரிவாழ்நகரினெண்கணனுலகினெய்தியே
நீயுமென்னையுயர்வாசுதேவனெனவோதுவாயெனநிகழ்த்தினான். 8

அறிவிலாமன்மொழியும்பவுண்டரனைநோக்கியாழ்முனிவனறைகுவான்
குறைவிலாதவனைமின்னுமின்மினிநிகர்க்கில்விநதைமகிழ்கொழுநனா
மிறைவனுக்குநிகராவைநீயெனவியம்பிடத்தழல்கொணயனாய்
நெறியறுத்துமறன்மலியவேயமருநீசனங்கிவைநிகழ்த்துவான். 9

பாபமின்முனிவனாயினுமபரிபவங்கள்செயதுனையடர்ப்பன்யான்
சாபநீயிடுவையென்றுவிட்டனனெழுந்துபோதியெனலுந்தவன்
கோபம்விஞ்சியபவுண்டரனறனருகோவியேகுறைவினஞானமெய்த்
தீபமாதவர்களுறையுமாதுவரைவீரனோடிவைகள்செப்பினான். 10

மாதவனொருவுமுன்னர்நீதிவழுவும்புறத்துறபவுண்டரன்
றூதுவன்றனையழைத்துயாதவன்முனெய்தியேயிவைகள்சொல்லுவாய்
பீதவம்பரமோடாழிவாள்கதைவில்வளையுயர்ந்தபெயர்விட்டுநம்
பாதமீதுசரணாயடைந்துய்தியென்றுநீபகர்தியென்றனன். 11

என்றுகூறியபவுண்டரனடியிறைஞ்சியெய்தியிடுதூதுவன்
மன்றல்சோலைமலிதுவரைமாநகரின்மண்டபத்தினமிசையெய்தியே
கொன்றைசூடியருள்பெற்றுயர்ந்தவரியானகோவின்மொழியெல்லவுங்
கன்றினால்விளவெறிந்தநீதொழுதுகேளெனக்கழறுவானரோ. 12

வேறு.

கோடுவிடுவில்லைவிடுவாளைவிடுகோதில்
நீடுகதைதனைவிடுநேமிவிடுபொனணி
னாடைவிடுபேரைவிடுநீசரணடைந்தே
யீடுறுபவுண்டரனையேதொழுதியென்றான். 13

ஈதெலவுநீவிடுவிடாயெனிலமர்க்கே
போதுதியெனக்கரம்புடைத்தரசர்நக்கார்
யாதவனகைத்திவையெலாம்விடுவனேகித்
தூதுவபவுண்டரன்வரும்படிசொலென்றான். 14

கோலமுறுமாயனிவைகூறவருதூதன்
காலெனவிமைப்பின்முனரிற்கடிதினேகிச்
சீலமில்பவுண்டரன்முனெய்தியிவைசெப்ப
வாலமெனவேகமிகவேயவனுரைப்பான். 15

ஆயரில்வளர்ந்தறிவிலாதுதிரிவானைச
சாயகம்விடுத்தமரின்வென்றுவருதற்கே
தூயகரிதேர்நிரைகடுன்னுபடைவீரர்
பாயிவுளியோடெழுமினென்றுரைபகர்ந்தான் 16

அன்னவன்மொழிந்திடவறைந்தமுரசங்க
டுன்னுவக்குரோணிபனிரண்டுபுடைசூழ
நன்னிலநடுங்கிடநடந்தகரிவெள்ள
மின்னுமுகில்போலயுதகோடிகண்மிடைந்தே. 17

காசிமனோடேகலவியன்கடிதுசெல்ல
வீசனருளாலரியுருக்கொளறிவில்லா
நீசன்வளைவாள்கதைவில்நேமியுடனேந்தி
யாசுறவருங்கருடன்மீதினினமர்ந்தான். 18

வாசவனொடேமுனிவர்வானவர்நடுங்க
வாசையுடன்வானிலமதிர்ந்திடவெழுந்து
வீசுதிரைமோதியிடுவேலையகழாக
மாசறவிளங்குதுவராபதியின்வந்தான். 19

நீதியில்பவுண்டரனொடேநெறிகளில்லா
தேதமலியுங்கலவியன்னெதிரிலாத
தீதினுறுகாசிபதிசெலலவதுகண்டே
மாதவனெழுந்திரதமீதவர்முன்வந்தான். 20

அடற்கதைவில்வாள்பணிலமாழிகையினேந்திச
சுடற்கனகவாடையொடுதூயகலுழன்மேற்
படைக்கண்வினைபோலுறுபவுண்டரனிலததி
னடிக்குமவர்போலவரவேயரிநகைத்தான். 21

வேறு.

மைக்கணமிக்குசசுற்றுமிடிக்கப்படர்வான்மின்
றிககவிரொக்கப்புக்கெனவும்பற்றிரள்சேர
வக்கிரமதந்தோடசசுதனைக்கண்டழல்கண்ணு
ரிக்கணமெற்றெற்றெற்றுதிரண்டேயெதிருற்றார். 22

இருள்வரைமருவுமருவியெனத்தான்மதமெய்தத்
தரையடிபுதையத்தால்நிகர்க்கைக்கதைபற்றித்
திரைதருகடல்போலும்பல்கள்பம்பத்திசைதோறும்
விரைபுரைதுளவத்தரியைவளைத்தார்விதியஞ்ச. 23

அழலுறுநயனத்தானைமுனிந்துதன்மெய்யி
னிழலினைமோதிநீண்டகரத்தாலுயர்வானின்
மழைமுகினீரைவவ்வியுரிஞ்சியரிசேனைக்
குழுமுழுகிடவேவீசிய்ஞாலங்குலைவெய்த. 24

உவருறுகடல்போலும்பல்கள்பம்பியுயர்கையாற்
கவருடைநெடிதாமானிறமோதிக்காலாலே
குவடுகடோளாயெழவிடறிததன்னிருகொம்பிற்
சுவடுறநிலனிற்குத்தியவதுநீர்த்துறையாக. 25

வேலினர்கோலினர்வில்லினர்குநதமிளிர்கையார்
காலனுமஞ்சக்கனலுறுகண்ணர்கடிதாய
தோலினவெரின்மேற்சூரசோதைக்கினிதாய
பாலனையுற்றுசசுற்றினர்பகழிமழைபெய்தே. 26

காலையடர்க்குங்காலொரிமைப்பிற்கனமீதின்
ஞாலமகற்றித்தாவிடுமிவுளித்திரள்வீரர்
நீலமுகில்போனின்றருணெடுமால்முனரெய்தி
வேலயில்குந்தம்வீசினர்விண்ணோர்மிகநோவ. 27

கரிவெரினுறுவோரிரதமீதுறுவோர்கடிதாய
பரிவெரினமர்வோர்படியொடுககனமறைவெய்தச்
சொரிசரமழைபோற்சூழவலரிசுரரோடுந்
தெருமரலெய்தவார்ததுவளைத்தார்திருமாலை 28

பேரிகைதிமிலைசசசரிபடகமபிரிதில்லாத்
தாரைகள்முரசந்தக்கையிடக்கைவளைபம்பை
வாருறுதுடிகைகரடிகையிவையினொலிவானோ
ரூருறவயவர்வளைத்தனருலகுண்டுமிழ்வானை. 29

அதிரதரெண்ணிலர்மாரதர்சூழவலையாரு
முததிகள்போலவும்பல்கள்பம்பவுயர்சேணி
னதிர்தருமிடிபோற்கம்பினமார்ப்பவுறிதாவித்
ததியனைநெய்பானுகரரிமுனரிற்சமர்செயதார். 30

அத்திதரிததோனருளினிலரிபோற்றிரிமன்ன
னத்திகளேகமாகுவகாலதொலியேபோ
லத்திகளெல்லாம்பம்பிடவாணன்புயமட்ட
வத்திகிரிக்கோன்முன்னர்நடநதானறிவில்லான். 31

வேறு.

அரனருளமால்வடிவுபெற்றவறிவில்லான்
கரியிரதமாவினர்களொடுகடிதெய்தத்

திருவின்மணாளன்முறுவல்செய்துசிலைகோலி
வருடமெனவெங்கணும்வடிக்கணைசொரிந்தான். 32

கரமறுவகோடிறுவகாலறுவநேரில்
சிரமறுவவாலறுவசெல்லெனவெழுந்து
புரள்வனகரித்திரடன்வென்னினுறுவோர்கள்
வரையெனவிழுந்துருள்வர்மால்விடுசரத்தால். 33

தேருருளநூறிவலவன்சிரமறுத்துக்
காருலவுநற்கொடிகளைந்துகளைகண்ணும்
வீரர்சிலையோடுகைவிழத்தலைதடிந்தே
யாரியன்விடும்பகழியண்டமுகமுற்ற. 34

திருமணாளன்விற்கொடுசிலீமுகம்விடுப்பக்
கரிவெரினினுற்றவர்கள்கால்கைகடுணிந்து
குருதியுகவும்பன்மிசைமற்றவர்குரம்பை
வரைமரநெறிந்ததெனமன்னியதுமன்னோ. 35

வரைநிகரெனத்திரியுமும்பன்முனர்மற்றோர்
கரிபடநிலத்தின்விழுகாளையைமுனிந்தே
சிரமெய்தெரியாதவகைதேய்த்தனபதத்தால். 36

பரனெய்கணையாற்பரியின்மீதினுறுவீர
ரிருகரனொடேபரடுவீழவிணையில்லா
வரியைநினையாதவர்களைம்புலமெனத்தம்
முறைவழிநிலாதிவுளியோடவுளையுற்றார். 37

தேரின்வருவீரருயர்சீதரனெய்யம்பால்
பூரியர்படைத்தபொருள்போலவெரினாவத்
தாருமொளிராசுகம்விடுக்கிலதலைந்தார். 38

சிலையொடுகரங்களறவேகொடிகொடேராண்
மலையெனவிழுந்துருளவாசிகரியெல்லாந்
தலையறுவசெங்குருதிதாரணியினோடு
மலகையுயிர்செற்றவருளாளன்விடுமம்பால். 39

நாணியறவில்லறநலங்கொளிரதத்தி
னாணியறமாவலவனற்றுவிழவொன்னார்
தூணியறவீரர்கடுணிந்தனர்கண்மாயோன்
பாணமழையெண்டிசைபரந்தவனல்பொங்க. 40

சேடனணையாகவமர்தேவனெய்சரத்தால்
வீடினர்களானைபரியோடுவயவீர
ரோடினசெழுங்குருதிகூளிகளுவப்ப
வாடினகவந்தமெணிலாதனவடர்ந்தே. 41

வேறு.

அந்தகன் வெருவவேயயின் மழுத்தோமரமசெரங்க
ளுந்தியேதந்தியெண்ணில்பரித்திரளின்மேலுருளுதேர்மேற்
சிந்துவின்ஞெலிகெடத்திசைசெவிடுற்றிருகங்கண்
மந்தரவரையெனக்குவையுறச்சுடுசரமால்விடுத்தான். 42

கஞ்சனைக்காய்ந்தருள்கண்ணனூர்கார்முகதரேவுமம்பாற்
குஞ்சரங்கோடகங்கொடிகடேர்கோடியோர்நிமிடமுன்னம்
பஞ்செரியுறவிறுந்தன்மைபோற்படிமிசைத்துகளதாக
வெஞ்சினக்கயவர்கம்விண்மிசைத்தாவினவெளியிலாமே. 43

தேரறக்கொடியறச்சிலையறப்பாகர்வெஞ்சிரமுமற்றே
காருறக்கரியறக்காலறக்கமமறக்கவசமற்றே
வீரர்தம்முரமறநித்திலத்தாவடஞ்சிதறிவிண்மேற்
றூரகையவிர்தனக்கொப்பலாதென்பபோற்றுவமன்றே. 44

நெடியவன்கணையினூற்கரிபரித்தேரறநிலையில்வீரர்
முடியறக்காதறக்குண்டலமெண்ணிலமுடுகிவிண்மேற்
கடிதினிற்சென்றுகீழ்வீழ்வனகவினுறுமபதமழிநதே
யுவினமெரியுறத்தரையின்வீழ்செய்கையையொத்ததம்மா. 45

அடல்செய்வோராக்கைமண்வீழவேநாவுமார்கலியினெய்த
வடவையினிருகணுமூற்றிடநாசிவாயுவினின்மேவக்
கடிதினிற்செவிகளைக்ககனமீதிடுதலாற்கண்ணன்வாளி
யடைவினிற்பிதுருமெதத்தநூற்கிரியைசெய்ததம்மா. 46

பகமொவீரனற்றசைநுகர்ந்துதிரநீர்பருகியெண்ணி
லிகலனுங்கூளியுஞ்ஞாளியுங்கங்கமுமெருவைதானு
மிகவுறும்பசிகெடும்படியெதிர்சேனையைவீட்டிமாயோன்
சிகியுறுஞ்செஞ்சரஞ்சென்றதாற்பரவுபகாரரொத்தே. 47

வேறு.

அத்தியின்வாழ்வோ
னத்திரமேவ
வத்திகளெல்லா
மத்திகளாய. 57

கோலவரிக்கோன்
கோலினமேவத
தோலினமெல்லாந
தோலினமாய. 58

அரிவிடுவாளி
யரியினுமுடுகக்
கரியினமெல்லாங
கரியினமாய. 59

பத்திரைகேள்வன்
பத்திரமேவ
வத்திரிமேவு
மத்திரமாய. 60

கரிதனைவென்ருேன்
காதலவம்பா
விரதமுமுளிப்பூ
விரதமேயாய. 61

சிந்துமகட்கோன்
சிந்துசரத்தால்
வெந்திறல்வீரர்
வெந்திறலாஞர். 62

வேறு.

அததியேயத்தியாகவயமாவயமாவாகச
சததிசத்தியாகத்தலைவர்தொந்தலைவராக
விததகவிரதம்மாவம்வித்தகவிரதமாக
வத்திரர்க்கணுகாவையனத்திரம்பரந்ததம்மா. 63

சக்கரத்தண்ணலேவுஞ்சாயகந்துணிக்கவாங்கே
கொக்கினம்படியின்வீழக்குஞ்சரங்குக்குண்மேவ
மிக்கிம்பரவைமென்மேல்விரிசிறைவயிற்றினெற்றிப்
புக்கழுந்தினவல்லாக்கைப்புரைவரும்புனலின்மூழ்கி. 64

கதமுறுகதமாவையங்கணகிலாவயவரெல்லாம்
விதமுறுவிசிகந்தன்ஞலிமைப்பினமுன்விபுலையின்கண்
சுதைசுரற்களித்தகோமான்றுலங்கியநாமமேத்தா
திதரதேவதையைச்சார்வார்தவமெனவிற்றதன்றே. 65

வேறு.

மாயவன்வலத்தின்வடிவாளிமழைதூவப்
பாயிவுளிதேர்மிகுபருப்பதகிகர்த்த
தூயகரிவீரர்கணிந்துநிலன்வீழ
நாயலகைசூழ்ந்திடநடித்தனகவந்தம. 66

அமபரமணம்புமழைதூவிடவடர்ந்த
வும்பறரையின்னயுதகோடிகளுருண்ட
வெம்புபரிவீரரிரதத்தொமெம்விழுந்தார்
செம்புனல்களோடியதுதேவர்கதித்தார். 67

அரிசிலையிஞல்விமெழற்கணையிஞலே
கரியிரதம்வீரர்பரிமாளவதுகண்டே
யெரிநயனஞகியபவுண்டரனெதிர்ந்தே
வரவவனைநோக்கியுயர்மாயவனுரைப்பான். 68

நீடெயனைவிடசசொனநெடும்படைகடன்னிற்
றீயவவுன்மேல்விடுவெனித்திகிரிதன்னை
மீயுயர்விசும்பினுயிரேகுமுன்விலக்கென்
றுயனகைசெய்துசுடராழியினைவிட்டான். 69

மர்யன்விடுமொழிகதிரஞ்சிடவடர்ந்தே
தூய்மையில்பவுண்டரன்முடித்தலைதுணித்து
மீயுயர்விசும்பினுறைவோர்மலர்விடுப்ப
வாயனுயர்செங்கையினமர்ந்துளதவ்வாழி. 70

வேறு.

சினமுறுபவுண்டரன்றனிறந்திடததிகிரிசங்கு
குனிவில்வாள்கதைபொன்னுடைகோலமாஙகலுழன்றாய
தனிமணியிவைகளெல்லாஞசடககெனமறைநதுபோய
கனவினிற்கண்டவெல்லாஙகண்விழிததிடக்காணுபோல். 71

திறன்மிகுபவுண்டரன்றன்றிகிரியான்மடியசீற்ற
முறவிரததின்மீதினுற்றுயர்காசிராசன்
கறைமிடற்றரனையேலககதமுறததிசைகளெல்லா
மறையவேவாளிதூவிவலமபுரிமுழககியார்ததான். 72

தரணியெண்டிசைகளெஙகுமறைத்தசாயகஙகடன்னை
யரியொருகணையினாலேயறுத்தழல்வாளிவிட்டுக்
கரிபரிவீரர்மாளவதைததுயாகாசிராசன்
சிரமறுத்தெழில்கொள்காசிததெருவிடையிட்டான்மன்றோ. 73

பவுண்டரனுடனுஙகாசிபதியிறைமடியக்கண்டு
சிவந்தெரிநயனனுனகலவியன்றேறிநெய்தித
தவந்தனிலுயர்ந்தோரஞ்சததாலகேதனனறன்மீதி
னிவநதிடுசிலையால்வாளிநிறைநதிடததூவியார்த்தான். 74

நிலனுயர்வானமெல்லாநிறைநதிடுமெவாளிதன்னை
யலமொளிர்கையினாற்சுற்றியகற்றியேயிராமநம்பி
சலமுறவெதிருகினறகலவியன்றடந்தேர்தன்னை
வலவனோடிவுளிமாளவடித்தனனவானோரேதத. 75

அலததினாலிரதமாவோடழியவேகலவியனறு
னிலததிடைகுதிததுமேருநிகரெனககதைகைக்கொண்டு
சலத்தொடுமெதிர்ப்பததாலகேதனன்கலப்பையாலே
வலததுடனடிததலோடுமுறிநததுவயிரததண்டு. 76

கதையிருகூறாய்வீழக்கலஙகுமேகலவியன்று
னெதிருறவஞ்சியோடியேழுயோசனையினீள
மூததியினழுவநதன்னுணைமூழ்கியாணடொளிததுப்போனான்
மதியொளிவண்ணநம்பிமாயவன்றனைசசேர்ந்தான். 77

வாசவன்வெருவவெய்தும்பவுண்டரன்வலியான்மிக்க
காசிமன்னுடனேமாளக்கண்டமாதவர்களெல்லா
மாசிகணமொழியவானோராவலங்கொட்டியார்ப்பக்
கேசவன்றுவரையெய்தியிருந்தனன்கிளையோர்வாழ்த்த. 78

பவுண்டரன்வதைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் – 1053.

---

## 95 - வது, சுதக்கணன் வதைப் படலம்.

தேசில்காசிபதிசிறுவனாகியசுதக்கணன்றவசுசெய்திட
வீசன்மற்றவனுரைத்தசொற்படியினீயவெய்தியகிருத்தியுங்
காசிமாநகரொடெரியநேமியடர்கவின்கொளாவிரலுகிர்தெறித்
தேசிறேவியுடனினியசூதுபொருமியாதவன்றனையிறைஞ்சுவாம். 1

காசிதன்னினெழில்வீதியிற்கடியகாசிமன்றலையுருண்டிட
வாசினுள்ளமிழ்சுதக்கணன்கடிதுநோக்கியேயழுதகண்ணினன்
வாசுதேவனிவைசெய்தனனெனமனத்தினின்மறநினைத்துய
ரீசனைத்தொழுதுகனல்வளாத்திடவிருந்தருந்தவமியற்றினன். 2

வருத்தமோடுயர்சுதக்கணன்கனல்வளர்த்துமாதவமியற்றிய, வருக்
திகண்டரன்முனெய்தியானறருவதேதுநீயறைதியென்றலும், பெருத்த
வெநதையையவதைத்தனன் னவிரகொள்பின்னைநாயகனை வெல்லவோர்,
கிருத்தியைத்தருதியெனனநஞ்சுதிசழ்கிரிவனிமமொழிகிளத்துவான். 3

அழலினாகுதிபெய்தாபிசாரநிறையச்செய்தாலதனுளனலுறும்
விதியளாமொருகிருத்தியெய்துவளொருவரன்கயிலைமேவினன [ன்
கழைகொடோளியுமைபாகன்வாய்மொழியினெஞ்சினவஞ்சமுறுகாவல
றழலினாவினெயசொரிந்துகங்கையுறுசடையன்மந்திரநவின்றனன். 4

வேறு.

அரனுரைக்கவேவளர்த்தவாவிசாரவனலுளே
யெரிமிகுத்தகண்களவசசிரத்தெயிறறுமுசசிரக்
கரமொராறினயின்முசுண்டிகட்கம்வாள்வில்கதையுற
விரைவினிற்கிருத்தியெய்திவிபுதரஞ்சநின்றனள். 5

அழலுளெய்தியமர்கிருத்திதன்னைநோக்கியரசர்கோன்
குழல்கொடேதுவோனையினறுகொனறுமீடியென்னவே
சுழலழற்கண்பிறையெயிற்றள்சூலமேந்துகையினாள்
தழலுயிர்ப்புநகையணீடுதாரணியஞ்சவேகினாள். 6

திக்கசங்கள்வெருவநீடுதிசைகளெங்குமெரியவே
யுக்கிரத்துரப்பியேயூழிகாலவிறுதியி

னக்கனுற்றவடிவுபோலநாகரஞ்சவிடியெனக
கொக்கரித்தடர்ந்துவந்துகோலகாலமாக்கினாள். 7

பன்னிரண்டியோசனைப்பரப்புநீளமாகியே
யுன்னுமுன்னம்வானொடாசையெரியவோதையுவரியின்
வன்னியென்னமுடிகிமாயன்வைகிவாழுநகருளோ
ரின்னலெய்திவெருவும்வண்ணமேகினாள்கிருத்தியே. 8

தவர்களெண்ணில்விபுதரோடுசேதமகனடுங்கவே
யவனியின்கணவடவைபோலமுடுகிவாரியலைகள்சூழ்
துவரைதன்னினடர்கிருத்திகூலமேந்திவருதலும
பவமிலாதவரசர்சேனைபாறினார்களலறியே. 9

இறுதிகாலமுறவெதிர்ந்தவீசனெற்றிவிழியழ
லறுதியாகவந்ததையகோவெனாவரற்றியே
நறுநெயுண்டநாதகாவெனாநவின்றுநகருளோர
முறையிடாநடுங்கிமாயன்முன்னரோடினாரரோ. 10

வேறு.

வித்துருமதூணெண்ணிலவிளங்குமாமண்டபத்தின்
சத்தியவாமையென்னுந்தத்தைநேர்மொழியாளோடு
நித்தமங்காடுகின்றநேமியானடிவணங்கிக
கைத்தலங்குலைத்துநெஞ்சாகுலமவரகசழறலுற்றார். 11

வாரியைப்பருகியோங்கும்வடவையோகடுவோவன்றி
நீரணிவேணியான்றனெற்றியின்விழியிற்றீயோ
பாரொடுந்திசையைச்சுட்டுப்பரந்தகல்விசும்பைமுட்டி
யேருறுந்துவரைதன்னினெய்தினவிறைவவென்றார். 12

எரியுறவளர்ந்தெண்டிக்கைச்சுட்டதென்றிரைத்துவந்தோ
ருரைசெயக்கேட்டமாயோனுமாபதிவரத்தாற்காசி
யரசர்கோன்விடவேவந்தகிருத்தியென்றறிந்துதன்கை
விரலுகிர்தெறித்துச்சூதுவிரும்பியங்காடினனால். 13

தாதுராகஞ்சேர்கூந்தற்சத்தியவாமையோடு
சீதரன்சூதங்காடிவிரலுகிர்தெறிக்கக்கோடி
யாதவரொளிபோற்றோன்றியாழியெண்டிசையுமண்ணு
மீதலத்துயர்ந்தவானும்விளங்கிடவெழுந்ததன்றே. 14

அரிவிரலுகிரைத்தானேதெறித்திடவாழியாகி
யெரியுறவடர்ந்துவந்துகிருத்தியையெரித்துக்காசி
யரசனைவதைத்தவ்வூரையழலினுக்கிரையதாக்கிச
சுரர்துதிசெய்யமீண்டுசோதியையடைந்ததன்றே. 15

சுதக்கணன் வதைப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 1068.

# 96 - வது. துவிந்தன் வதைப்படலம்.

அந்தரத் துயர்ந்தவென்றின் சுதனடி பணிந்துவாழ்த்த
விந்திரனுலகைத்தாண்டியிலங்குறுஞ்சாலமெய்தே
துந்துமிதனைத்தாளால்வானுந்தியசோதிநாமஞ்
சிந்தையின்மகிழ்ந்துகூறுஞ்சீரியோரடியிற்சேர்வாம். 1

சுந்தரஞ்செறிந்த தூணகலிலங்குமாமண்டபத்தி
னந்தணர்குழாங்கள்சூழவிருக்குமச்சுதனைநோக்கி
யிந்துநேர்வண்ணனன்பாலசோதையோடிலங்குகின்ற
நந்தனைக்கண்டுமீள்வனென்றுரைநவின்றுபோனான். 2

தூயமாமணித்தேர்மீதிற்றுலங்கியவிராமநம்பி
யாயர்தம்பதியினெய்தியசோதையைவணங்கியண்டர்
நாயகனாகியோங்குநந்தனைப்பணிந்தலோடு
நேசமோடணைந்துகண்ணீர்நிலனுறவிளம்புகின்றார். 3

இந்திரைகொழுநனிப்பதூடணிருந்தனனெம்மைத்
தந்தைதாயெனவேயெண்ணிநினைப்பனாசாற்றுகென்று
நந்தனோடசோதைகண்ணீர்நிலனுறநவிலலோடுஞ்
சுந்தரவிராமநம்பிபரிவுடன்சொல்லலுற்றான். 4

மாயவனாகிவந்தபவுண்டரன்றனைவதைத்துத்
தீயவெங்காசிமன்னைத்துணித்தவன்சேயைச்செற்று
நோயெனமூடுகிவந்தகிருத்தியைநொறுக்கிக்கண்ண
னாயுமாமறையோர்சூழத்துவரையினமர்ந்தானென்றான். 5

அன்னையாமநின்னைத்தந்தையாகியநந்தன்றனைத்
தன்னியவன்பினித்தம்பினைநத்தும்மைத்தொழுதிவ்வூரின்
மனனுவன்சிறிதுநாளின்மாயனீர்வருந்தலென்றே
யின்னலிலிராமநம்பியியம்பிடத்தேறினால். 6

தாலகேதனனையன்பாற்றழுவிப்பொற்கலத்திற்றூய
பாலனவருக்கமெல்லாம்பரிவுடனளித்துப்பின்னர்
மாலையோடாரமெல்லாமகிழ்வுடன்கொடுத்துநித்தஞ்
சீலமாகுணத்தசோதைசிறந்தினிதிருக்குநாளின். 7

வசந்தகாலந்தானெய்தவனப்புடையிராமநம்பி
பொசிந்தநண்ணிடையராயவாய்ச்சியரோடுமுற்றே
யசைந்திடுதென்றல்வீசவலர்மலர்ப்பொழிலைநண்ணி
யிசைந்திடுமதுராகீதத்தியாழிசையிசைத்தார்மாதோ. 8

மதுரயாழிசைத்தமாதர்வாருணமதுவந்தெய்தச்
சுதைநிகரமிர்தமின்னார்தன்னினுந்துலங்கிச்சூழ்ந்து
குதுகெனக்கரத்தின்றுய்யகனகவள்ளத்தினேற்றே
யதிவிதகளிப்பாலுண்டயதவனைவருமருந்தினால். 9

க்டத்தினின்மதுவையுண்டோர்காரிகையரிவையோவி
யுடற்றடிப்புறவவ்வேரியுரோமத்தினெறியிற்பொங்கிப்
பொடித்ததென்றிணைமென்கொங்கைபுனைவடமாரங்கையி
னொடிப்பினினமைத்துத்தோழிநுகருதிநறவையென்றாள். 10

நறவினல்லிரதமோராநாரணன்வெண்ணெயுண்டு
கறைநடுவதனிற்கட்டுண்டனன்கடுவிடத்தைநுங்கிப்
பிறையணிசடையன்பித்தனாயினன்பிரிதில்வேரி
யுறுசுவையறிவாரென்போலிலையென்றங்கொருத்தியுண்டாள். 11

நலனுறுமதுவையுண்டோர்களிகுமானைக்கவிந்து
நிலவொளிபரக்கக்கைப்பொன்வள்ளத்தைநேரநோக்கிப்
பலனுறுமதுவைத்தோழிபருகுதியெனலும்பாங்கி
யிலவிதழதரம்வைத்தாண்டிலாதுநாணுற்றாளன்றே. 12

மதுநுகர்வள்ளத்திற்றண்வார்குழன்மீதினோடு
மதுகரவருவைநோக்கியொருத்திமாயவன்வானோர்க்கு
மதுகரத்தேந்தியீந்தவண்மையைப்போலநீரிம்
மதுவினையயிலாதியான்றன்பருகிடவழங்குமென்றாள். 13

வேறு.

பீதகவள்ளத்தினொருத்திபேரின்பம்
போதவேமதுவுண்பாள்பூமரத்தின்வீ
ழேதமினறவுகண்டெமைப்போற்களுண்
மாதவம்பாதவமவதிந்ததில்லென்றாள். 14

இவ்வழியனைவருங்களிப்பஞ்செய்தவே
செவ்விதழாயவாயவெளுப்பத்தீதிலா
நவ்வியைப்பழித்திடுநயநச்செம்மையை
வவ்வவள்ளங்கொடுமதுவுண்டாரரோ. 15

வேறு.

வாருணமதுவந்தெய்தமகிழ்ந்தெழின்மயில்கள்போலு
நாரியருடனுமன்பாற்பருகிநன்மலர்கள்சூடி
யாரமெய்க்கணிந்துநானங்கமழ்ந்திடயமுனையாற்றி
னீரினைவருதியென்றேயலாயுதனிகழ்த்தினானால். 16

நலத்துடனிராமநம்பிநவின்றிடயமுனையாறு
நிலத்திடையெய்தாதாகநெஞ்சுறுமுனிவினோடு
மலத்தினாலிழுத்தலோடுமெடியினில்வந்துவீழ்ந்தாள்
சலத்தொடுநதியிற்றூயகாளிந்திதவளமாகி. 17

ஆயிரநீலமுன்னரளித்துயாயமுனையாறு
தூயவள்பயத்தினோடுந்துலங்கிடவிராமநம்பி
நேயமோடிலகுவாசநிறைமலர்பறித்துவீசி
வேய்கொடோளியர்களோடும்விரும்பிநீராடினானால். 18

அயவிளையாட்டுமுற்றியஞ்சனவாடைசுற்றிக்
கயல்விழிமடவாரோடுங்கலனெலாமணிந்துகொண்டே
யியல்புடையிரேவதத்தினெய்தியாழிசைகள்பாடி
மயிலுறுகானந்தன்னின்வனப்புடனிருக்கும்வேலை. 19

அரிகளினதிகனானமயிந்தனுக்கனுசனாகி
நரகனோடளப்பிலாதநட்புடைத்துவிந்தனாயர்
புரிகளையழலாற்சுட்டுப்பொதுவரைக்கரத்தாற்பற்றி
வரையுறுபிலனுள்ளிட்டுமறம்பலசெய்தான்மன்னோ. 20

நியுதயானையின்வலத்துத்துவிந்தன்வானீண்டமெய்யன்
கயிலையைநிகர்த்ததாலகேதனன்களிப்பினோடு
மயினிகரணங்கினாரோடிரேவதைவரையிற்சார்ந்தே
வியல்புறவிருக்குங்காவினிமைப்பின்முன்னெய்தினானால். 21

மாதவர்மகிழத்தாலகேதனன்மதுரமிக்க
கீதயாழிசைக்குமவேலைகிட்டித்தன்றசனங்காட்டிப்
பாதவமீதினெய்திப்பாசடைபறித்துவீசி
மோதினன்கோடுவாங்கிமுனிந்துயர்துவிந்தனம்மா. 22

மலையெனவுயர்ந்துதோன்றும்வானரமரத்தினேறி
யிலையொடுசாகைவாங்கியெறிந்திடமாதரெல்லாங்
குலைகுலைந்தவனியோடக்குபிதனாமிராமநம்பி
யலமெடுத்தவன்றன்மீதினெறிந்தனனமரர்வாழ்த்த. 23

அடுசினந்திறுகவீரனெறிந்திடுமெலாயுதத்தைக
கடுமையிற்றப்பிச்சேர்ந்துமதுவுறுங்கலசமெல்லாம்
பொடிபடவுடைத்துத்தூயபொன்னவிர்தூசைப்பீற
மிடலுடையிராமநம்பிமேல்விழுந்தடித்தானம்மா. 24

சிரமிசையடித்துமார்பிற்புடைத்திடுநீயோன்றன்னை
முரணுறுமிராமநம்பிமுசலங்கொண்டடித்தலோடும்
வரைவிழுவதுபோல்வாயிற்குருதிநீர்மண்ணினோடத்
தரைமிசைமயங்கிப்பின்னர்தெளிந்தனன்மயிந்தன்றம்பி. 25

தேறியதுவிந்தனெஞ்சிற்சினத்தொருசாலம்வாங்கி
யேறுறுமரனுமஞ்சவெறிதலுமிராமநம்பி
நூறுகூறாகத்தண்டானொறுக்கியம்மரத்தைவீழ்க்க
மாறிலோர்பிறங்கலேந்தியெறிந்தனன்மயிந்தன்பின்னோன். 26

வடவரைபொருவவெய்தமலையினையலத்தினாலே
படியிடைத்துகளாயவீழப்பால்வண்ணனடித்தலோடுங்
கடுமையினெண்ணிலோங்கல்கவடுடைமரங்களெல்லா
மிடலுடைத்துவிந்தன்விட்டேயார்த்தனன்விண்ணோரஞ்ச. 27

இடிகளும்வெருவவார்த்தேயெண்ணில்பாதவங்களோங்கல்
கடியவன்விசையின்மென்மேலெறிந்திடக்கண்டுகோல

வடிவுடையிராமநம்பிவருவரைமரங்களெல்லாம்
பொடிபடவலத்தானூறப்பூமழைபொழிந்தார்விண்ணோர். 28

விட்டிமரங்களெண்ணில்விலங்கல்கள்பொடியதாக
மட்டவிழலங்கல்சூழுமதிவண்ணனலத்தான்மோதக்
கிட்டியதுவிந்தனூர்த்துக்கிரியிடையிடிவீழ்ந்தென்ன
சிட்டரெண்ணிராமநம்பிசிரமிசைப்புடைத்தான்மன்னோ. 29

சிரமிசைப்புடைத்தலோடுஞ்சிறியேயிராமநம்பி
யரிகுலவீரன்மார்பினசனிவீழ்ந்தென்னவாங்கே
யொருகரமுறுக்கிக்குத்தவுதிரம்வாயொழுகியோட
வரையுருளுவபோற்பாரின்மடிந்தனன்றுவிந்தன்மாதோ. 30

தீயனாந்துவிந்தன்மாளசசிறந்திடுஞ்சுரர்களெல்லாந்
தூயமாமலர்கவேிததுதித்தனரிராமன்றன்னை
நேயமோடாயர்மாதர்நிறைந்திருமருங்குஞ்சூழ
மாயவன்முன்னோனெயதியசோதையைவணங்கினானல். 31

தாயெனுமசோதைதன்னைப்பணிந்தசக்கரத்தோன்முன்னோ
னாயரிற்பெரியோனறன்னைபடிதொழுதெழுதலோடுந்
தீயனாந்துவிந்தனறனைசசெற்றவன்றன்னைநந்தன்
றாயமாதேவியோடுமணைத்தருள்சுரந்தானன்றே. 32

விலங்கலாமவன்வான்சேரயவிலங்கலின்முழையுட்போடக்
கலங்கியவாயர்தம்மைவிடுத்துயர்கண்ணன்முன்னோ
னலங்கிளரசோதைநங்கைநந்தனோடிரங்கிற்பப்
பொலஞ்செறியிரதமீதிற்றுவரையிற்புகுந்தான்மன்னோ. 33

அன்னையைவணங்கித்தூயவருள்செறிவசுதேவன்றன்
பொன்னடிபணிந்துநினறபொற்புறுமலரதோன்றன்னைப்
பின்னவனிறைஞ்சமார்பிற்றழுவிப்பேரின்பமெய்து
மன்னவர்குழாங்கள்சூழமகிழ்ந்தினிதிருந்தான்மாதோ. 34

துவிந்தன் வதைப் படலம் முற்றிற்று.

ஆகததிருவிருததம் - 1102.

---

## 97 - வது, மதனன் ஜனனப்படலம்.

---

சோமனைச்சடையிற்றாங்குமரனபடிந்துன்பநீக்கிப்
பூமனைததந்திரேழுபொழில்களுமபடைததுககஞ்ச
மாமனைவதைததுப்பின்னர்மாதவர்குழாங்கள்போற்றக
காமனையளிககுமாயோனகழலிணைகருதுவோமயாம்.

ஆழிசங்கிலங்கும்பாசமங்குசமளிநாஞ்சும்
வேழுவில்வெறிகள்வீசுமவிசிகமவேயமர்ந்தவெண்ணை

மாழையின்கடையந்தோன்றமதனகோபாலனாகி
யாழினைப்பழிக்குமின்சொல்லுருப்பிணிக்கின்பமீந்தான். 2

கத்தூரித்திலதநெற்றிகவினுறக்கழுத்தின்மார்பின்
முத்தாரமிலங்கநேரில்கவுத்துவமுகிலின்மின்போல்
வித்தாரத்திலதநாமந்தெரிவுறவரம்பைவாம
மொத்தூருவயங்குமாதாமுருப்பிணிக்கின்பமீந்தான். 3

தாடொகுநளினத்தேவிதன்னுடன்றேனும்பாலுங்
கூடியதொப்பச்சிந்தைகுளிர்ந்திடப்பாயலெய்தி
நீடியவின்பமெய்திநேமியோன்மகிழுநாளின்
பீடுடைமதனனையதுமியல்பினைப்பேசலுற்றாம். 4

நக்கன்மாதவர்கட்கெல்லாம்நாயகனானசோதி
திக்கெலாம்விளங்கவைகித்தினம்பரிசாரகஞ்செய்
திக்குநேர்மொழியளாயவுமையுவந்திறைஞ்சியேத்தத்
தெக்கணாமூர்த்தியாகிச்சிறந்துயோகஞ்செய்நாளின். 5

தீயவெஞ்சூரன்றன்னைச்செயித்திடச்சிவன்றான்செய்யுந்
தூயமாயோகமாறிச்சுதன்றனையளிக்கும்வண்ண
மாயிரநயனன்றன்னோடமராகண்மதனைநோக்கி
நீயரன்றவத்தைமாற்றியெம்மிடர்நீகென்றாரால். 6

சுரரிவைமொழியமாரன்றூயகன்னலின்வில்லேந்தி
யரியுறுநாணதாகவைமலர்வாளிபூட்டி
விரைவினிலரன்மேலெய்யவெகுண்டவனுதலின்கண்ணை
யெரியுறவிழிக்கக்காமனெரிந்தனனிமைப்பின்முன்னம். 7

அரனுதல்விழியினாலேயழகியமதனீராக
இரதிதன்வயிற்றினெற்றியிருகணீர்நகிலின்வீழப்
பருவரற்பரவைதன்னுட்பதைக்கின்றுடன்னைநோக்கிச
சுரரெழில்வலாரியோடுந்துலங்கியவரன்பாற்சென்றார். 8

அரனெழிற்பாதந்தன்னிலிறைஞ்சிவானவலாரியண்ட
ருரைசெய்வாருமைதன்கேள்வவுன்னுதல்விழியிற்றோன்று
மெரியினிறந்தான்றேவியிரதியங்கெய்துகின்ற
பருவரலொழித்தியென்னப்பகர்ந்தடிபணிந்தார்மன்னோ. 9

சுரரொடுவலாரியெய்தித்துதிசெயதமொழியைகேட்ட
வரனருள்புரிந்தெல்லோர்க்குமனங்களுய்த்திரிந்துமாற
னிரதிதன்விழிக்குத்தூயவுருவனாயியங்குவானென்
றுரைசெயமதனன்றேவியுவகையோடிறைஞ்சலுற்றாள். 10

என்னிருவிழிக்குத்தூயவுருவனாய்வசந்தனென்னை
மன்னுவதெப்போதென்னமண்மிசைப்பாரநீக்க
நன்னிலமதனிற்றோன்றுநாரணன்சுதனாய்ப்பாரி
றுன்னுடன்னைவனென்றேயுமைகணவன்பின்சொல்வான். 11

தரணியிற்பாரகீக்கித்தன்னுடைச்சோதிதன்னி
லரியுவந்தெய்தும்போழ்தினைவர்க்குமனங்கனாகி
யுருவுடைக்கொழுநனாகவுன்னுடன்சேர்வனென்றே
யெருதினிலேறுவோன்கூறவிரதிதானேகினாள். 12

அன்றிரதிக்குத்தூயவரன்வரமளிக்கமாரன்
வென்றிகொள்விதர்ப்பன்பெற்றமெல்லியல்வயிற்றிற்றோன்றக்
குன்றெடுத்தருளுமாயன்றேவியைக்குறித்துநோக்கி
மன்றலர்குழலினாடேவகிமனமகிழ்ந்தாண்மாதோ. 13

கருப்பமோராறுதிங்கணிறைந்திடக்கவின்கொணங்கை
யுருப்பிணியுடன்மாலோராதனத்திருந்துவகையெய்தத்
தருப்பையைவிரித்துக்கர்க்கன்றழலினாகுதிசெய்தோமம்
விருப்பமுற்றுயர்வேதத்தின்விதிவழிநிறைத்தான்மன்னோ. 14

மறையவர்தமக்குப்பூமிதானமாதானஞ்செய்து
நறுநெய்பால்பருகுமாயனலனுறத்தசமாந்திங்க
ணிறையவேவிதர்ப்பன்பெற்றநிகரிலாவனசமங்கை
மறுவிலாமதனன்றன்னைப்பயந்தனள்வானோர்வாழ்த்த. 15

அறந்தவறாதமாயோன்றனக்கழகானமைந்தன்
பிறந்தனனென்றுமாதர்பேசிடவுவகைநெஞ்சிற்
செறிந்திடவிரைநீராடித்திமிலைசின்னங்கள்பேரி
யறைந்திடக்கோயில்புக்கானந்தணர்குழாங்கள்சூழ. 16

நங்தொடுதிகிரியேந்துநாரணன்கோயின்மேவி
மைந்தனையெடுத்துத்தூயமதிமுகநோக்கலோடுஞ்
சிந்தையின்மகிழ்ந்துகர்க்கன்சாதகவோமஞ்செய்ய
வந்தணர்குழாங்களாசியறைந்தனர்பேரியார்ப்ப. 17

வேறு.

தேவகிரோகணிசிறந்தரேவதி
பாவையர்பலருடன்பரிந்துநோக்கியே
யோவியஞ்சுவைகெடுமுருவினான்றனை
ஆலவினணைத்திவன்மதனனாமென்றான். 18

தாலகேதனன்வசுதேவன்சாத்தகி
சீலமாருக்கிரசேனன்றேவகன்
கோலமார்மாயவன்குமரனாகிய
பாலனைநோக்கியாசிகள்பகர்ந்தனர். 19

தரளமாமணிகள்சாமீகரத்துட
னிரவலர்மிடிகெடவீந்துமாதவன்
ஈரியிலாதுயர்ந்தகோகோடிதானங்க
ளருமறையறிபவர்க்கருளினானரோ. 20

வீழியின் கனியென விளங்கும்வாயின
டாழ்விலாவுருப்பிணிதனயன் றன்னுட
னேழ்தினமகிழ்வுடனிருக்குமவ்வழி
யூழ்வினைசெயலினையுரைக்கின்றேனரோ. 21

மதனன் ஜனனப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - 1123.

## 98 - வது, சம்பரன் வதைப் படலம்.

வச்சிரப்படையனோடண்டர்வாழ்த்திட
நச்சுறுமரவின்மேனடித்துவேத்தி
னுச்சியினசைவிலாதொருவனாகிய
வச்சுதன்பெயரினையறைந்துய்வாமரோ. 1

நம்பர்தந்நுதலுறுநயனத்தீயினா
லம்பரந்தெரிந்துபின்னனங்கனானவன
வெம்பகையாயசம்பரன்வெகுண்டெழுந்
திம்பரினிரதியைப்பற்றியேகினான். 2

நீரணிசடையினானெற்றிக்கண்ணினான்
மாரவேளெரிந்திடமயங்குஞ்சிந்தையாள்
பாரினிற்சம்பரன்பற்றியேகவே
யாருயிர்விடுவெனென்றயருமவேலையின். 3

இந்துவின்சடையனாலெரிந்தமன்மதன்
சுந்தரவரிசுதனாகித்தோன்றியே
வந்துநின்னிடர்கெடமணப்பனாமென
வந்தரத்துயர்ந்தவசரீரிசாற்றின. 4

துனியறவுயர்ந்தவசரீரிசொல்லவே
வினையுறுசம்பரனமேவும்போதெலாந்
தனையவன்கரந்துதனமாயைதன்னினா
லினியதோரரிவையைப்படைத்தங்கேகுவாள். 5

ஆசுறுசம்பரனணுகும்போதெலா
மாசின்மாயாவதியானமங்கையைத்
தேசுறவேவியாண்டிரதிசீருற
வேசறுமருந்ததியென்னவைகினாள். 6

பவமறுநாரதன்பழிப்பின்மன்மத
னவனியிற்சனித்தமையறையச்சம்பரன்
றவரையினெய்திமால்சுதனைப்பற்றியே
யுவரியினெறிந்துதன்னூரிற்சென்றனன். 7

கடியுடைக்கமலமின் கண்களிக்கத்தன்
மடிமிசைக்கிடத்தலுநகைத்தமைந்தனைக்
கடுமையிற்சம்பரன் கைக்கொண்டேகவே
யிடருறவிருநிலத்திரங்கிச்சோர்ந்தனள். 8

தினமோரேழ்மகிழ்வுடன்சிறந்திருந்திடும்
வனிதைதன்மடிமிசைமகனைக்காண்கிலா
ணினைவழிந்தலறியேநிலத்திற்சோர்ந்திட
வனைவருமெய்தியாண்டரற்றினாரோ. 9

மாமியாந்தேவகிமலர்ககணீருகப்
பூமிசைவனிதையையெடுத்துப்புல்லியே
காமனைநிகர்த்தவென்கண்ணன்பாலகன்
போம்வகையேதெனப்புலம்பினாளரோ. 10

சேயினையிழந்தவளிரங்குஞ்செயகையை
மாயவனறிந்துயர்மனையினெயதிநற்
றாயுடன்றந்தையுந்தழுவசசக்கர
னேய்விலாதிருகணீருகவரற்றினான். 11

மதுமலருறையுமின்னெழுந்துமாயவன்
பதமிசைவிழுதலுமணைத்துப்பார்மிசை
விதியினைவெலற்கரிதென்றுவிமமியே
சுதையைநேர்மொழியினாட்கினையசொல்லுவான். 12

மாயமாய்சசம்பரன்வஞ்சஞ்செயததுந
தூயநற்சுதனினிவருகுஞ்சூட்சியு
மாயவையெல்லவுமறியக்கூறினான்
சேயினையிழந்தவடேறும்வண்ணமே. 13

எதுகுலத்தரசர்களிடரின்வீழ்ந்திடப்
பதகனுஞ்சம்பரன்மதனைப்பற்றியே
யுததியினெறிந்திடவொளிகொள்வேளினைக்
கதுமெனவிழுங்கியமகரங்கண்டரோ. 14

பரதர்கள்பரவையிற்பரந்துமீன்கொலக்
கருதியேவலைகளைக்கடிதுவீசிட
விரதிதன்கொழுநனைவிழுங்கியேகிய
விருதுறுமகரமீன்பிடித்துமீண்டனர். 15

சகரநீர்கிழியவேதாவியோடிய
மகரமீன்றனைக்கொடுநிரலர்வளமைம்சோ
சிகரமாடங்கள்சூழ்நகரிசென்றுதா
னிகரில்சம்பரன்றனக்கீந்துநின்றனர். 16

கடியவச்சம்பரன்கண்ணினோக்கியே
நெடியவம்மீனினைச்சமையுநீரென

மடையர்கண்மகரமீன்வயிற்றைப்பீறநற்
சுடரொளிமதலைதான்றோன்றக்கண்டனர். 17

தூயமீன்வயிற்றினிற்றோன்றுமைந்தனை
நேயவாலுவர்கடாம்வாஙகிநீதியில்
தீயசம்பரன்முனர்க்காட்டத்தேவியா
மாயமாயாவதிமகிழவீந்தனர். 18

ஆயதோர்காலையினணுகிநாரதன்
றாயமாவிரதிமுன்சொல்லுவானரன்
காயவேயெரிநதிடுங்காமன்மண்மிசை
மாயனுந்துவரைமன்மைநதனுயினன். 19

சீருறுமுருப்பிணியீன்றசேயினைப்
பூரியசம்பரனெடுத்துப்போந்துயர்
வாரியினெறிநதிடமகரநுங்குமிவ்
வீரியன்வேளெனவிளம்பினனரோ. 20

நீயவன்றன்னையேவளர்த்துநேரிலா
மாயையாயிரஙகளும்வருவித்தீரெட்டுத்
தூயநல்வருடஙகளொருவவுன்றனி
மாயவிவ்வசந்தனுக்குரையிவ்வாறெலாம். 21

சோடசவருடங்களொருவித்தூயமதன்
சேடனும்வெருவுறத்திரியுஞ்சம்பர
னேடமர்பொருதவனுடறுணிப்பனற்
பீடையிரதியேயென்றுபேசினன். 22

ஈதெலாமொழிந்தவண்முனிவனேகலுந
தீதெலாமகற்றியவிரதிசிநதையின்
காதலாற்கணவனையணைத்துத்தன்கர
மீதினில்வளர்த்தனண்மகிழ்வுவிஞ்சவே. 23

வேறு.

இருந்துபின்றவழ்நதுமெல்லநடந்தைநதுபருவமெய்தி
யருந்தவர்மகிழவேதமறைநதுயர்சாத்திரங்க
டிருந்திடப்பயின்றேயோங்குஞ்சிலையினூல்விதஙகள்கற்றே
யருந்தியனையதேவிவளர்க்கவேளழகனுனன். 24

காயுமாகரிநடத்திக்கதையினூல்கற்றுப்பாரிற்
பாயுமாவிரதமூர்ந்துபதினறுவருடஞ்செல்லத்
தூயமையாஙகொழுநன்றன்னைநோக்கியேதுயரமோவி
மாயையாயிரமுமோதுவித்தனளிரதிமாதோ. 25

கன்னல்வில்லேநதுகாமன்கவினுறுமிரதிதன்னை
யன்னையென்றினிதுநோக்கவவளெழிற்காந்தனென்று

தன்னிருவிழியாற்காதறழைத்திடநோக்கலோடு
மென்னிவையென்னவுன்னிமதனனுண்டியம்பலுற்றான். 26

அன்னைநீயன்றேயென்னையளப்பறுமாசைதுன்ன
வுன்னிருவிழியாற்காதலுற்றிடநோக்குகின்றா
யென்,னிவையுரைத்தியென்னவெழின்மதனியம்பலோடு
மின்னிடையிரதிகாந்தன்றனக்கிவைவிளம்பலுற்றாள். 27

நீயென்றன்மகுணனுயவேனிலாய்நெற்றிக்கண்ணன்
காயவேயெரிந்துமீளக்கவினுறுதுவரைமன்னு
மாயன்றன்சுதனுய்வந்தநின்னைவாரியினுள்ளிட்டான்
றீயவுன்பகைஞனுனசம்பரன்சேர்ந்துமன்றே. 28

வாரியுண்மகரநின்னைவிழுங்கிடவலைஞரெய்தி
நீரினுண்மீனைத்தாங்கள்பற்றியேநெறியின்மீண்டு
சீரில்சம்பரன்றன்முன்னர்காட்டக்கூவியர்கள்சேர்ந்து
பாரினிற்பிளக்கநீயாங்குழவியைப்பரிவிற்கண்டார். 29

மடையர்கணின்னையுன்றன்புரவலன்முன்னர்வைப்பக்
கடியவனுடனேகூடிக்கலந்தனுபவந்தான்செய்ய
வடிவுடைமங்கைமாயாவதிதனைப்படைத்தேனந்தக்
கொடியிடைமடவாள்கையிற்கொடுத்தனனின்னையென்றாள். 30

இவையெலாமென்றுனெய்திநாரதனியம்பினுனென்
றுவமையிலிரதிகூறத்தேவியையணைத்தொண்டேரி
ணவையறுகுணததுநாரியிவுளியைநடத்தியேகப்
பவமுறுசம்பரன்றன்பயமுறவார்த்தானன்றே. 31

மாரவேளிரதியோடுமெணிநெடுமிரதமேறி
வீரமார்தனுவினுணையெறிநதண்டம்வெடிப்பவார்ப்பச்
சூராமசுரரோடுந்துன்மதிசசம்பரன்றன்
றேரின்மீதேறிமூரிசசிலையெடுத்தெதிர்ந்தானன்றே. 32

சம்பரனெதிர்த்தலோடுந்தழங்கியசங்குபேரி
தும்பிகளெண்ணிலாததுரகமோடுயரும்வீரர்
வெம்பியேவளைந்துசூழவீரவேள்விசிகமாரி
யம்பரந்திசைபாரெஙகுமிறைத்தவனார்த்தானம்மா. 33

கரியொருகரமுமற்றுக்கால்களுமறவேவீழ்ந்த
பரியிருகுரமுமற்றுப்பருப்பதம்போன்றுசாய்ந்த
வரிசிலைதுணியவீரர்முடித்தலையுருளமாண்டார்
குருதிபேராறுயோடக்கொடிகுடைமிதந்தமாதோ. 34

வசந்தனேவையமாகவயங்கிடுவெசந்தன்வாளி
கசந்தனைத்துணிக்கசசந்தங்காண்கிலாதேபல்கூறு
யசந்தசைக்குவைபோல்வீழவசைந்ததின்சுவலோர்வீழ்ந்தார்
புசந்தலையுரங்கைகாலேபுசம்படப்புரண்டுபோனர். 35

பீடுடைவசந்தன்வில்லாற்பிறைமுகவாளிபெய்யக்
கோடுடைக்கசங்களெண்ணில்குரகதநிறைகண்மாள
வாடினகவந்தங்கோடியளக்கரிற்குருதிபாய
வீடினரசுரரெல்லாம்வெகுண்டுசம்பரன்றான்வந்தான். 36
சம்பரன்றனுவைவாங்கிச்சாயகமாரிபெய்தே
யும்பர்கணடுங்கவானமறைத்துருத்தார்த்தலோடும்
வம்பவிழ்மாலைமார்பன்மதனழல்வாளியாலே
யிம்பரினறுத்துவீழ்த்தானெதிருமாசுகங்கடன்னை. 37
எரியுறுநயநனாயசம்பரனெதிரிலாத
வரவுறுபடையைவிட்டானமரர்களஞ்சியோட
விரதிதன்கொழுநன்வெய்யவிராக்கதர்படையைவாங்கிச
சுரர்துதிசெய்யவெய்யத்துணிந்தமாசுணங்களெல்லாம். 38
கடியசம்பரன்றானெஞ்சிற்கனன்றுகாந்தர்ப்பவாளி
படியெலாம்நடுங்கவிட்டான்பார்த்துயர்மதனராசன்
கொடியவெங்கூளிவாளிகுனிவிலாற்றொடுத்துவிட்டு
நொடியின்முன்னறுத்தலோடுநுவன்றனராசிவிண்ணோர். 39
தீயசம்பரன்றானெஞ்சிற்சினமுறசிலையினாலே
யாயிரவிதங்களானமாயவாசுகங்கள்விட்டான்
மாயவன்மதலைபத்துநூறதாமாயவாளி
யேயெனுமுன்னமெய்தேயறுத்தனனிமையோரேத்த. 40
கதமுறுசம்பரன்றான்கதையெடுத்தெறியவானின்
பதியினர்நடுங்கவெய்தக்கண்டரிபயந்தமைந்த
னுததியைக்கடைந்தமத்தையொத்ததோர்தண்டாலும்பர்
துதிசெயப்படியின்மீதிற்றுகளுறவடித்துவீழ்த்தான். 41
இரதிமாவிரதமூரவெங்கணுந்தானுமாரன்
சரதவாசுகங்கடனாற்சம்பரன்மேனியெல்லாங்
குருதியாறாகவோடக்கொடிசிலைதுணித்துத்தேரின்
பரிதரணியின்கண்மாளப்பகழிகள்விடுத்தானன்றே. 42
சூலியெண்ணசுரன்றோமாத்துவசம்வில்லழியப்பொங்கி
ஞாலமூற்றொருவேல்கொண்டுநமனஞ்சவெதிர்த்தலோடும்
மாலிரும்புதல்வனவெய்யவாளினைச்சுழற்றிவிட்டுச்
சீலமில்சம்பரன்றன்சிரத்தினைத்துணித்தானம்மா. 43
சம்பரன்மடிந்துவீழச்சதுர்மறைமுனிவரோடு
மம்பரத்தும்பரெய்தியாவலங்கொட்டியார்த்து
வம்பவிழ்மலர்கடூவிமகிழ்ந்தனர்மதனராச
னிம்பரினிரதமீதினிரதிகோடிலங்கினானால். 44

சம்பரன் வதைப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் – 1167.

# 99 - வது, அநிருத்தப் படலம்.

திகிரியையெடுத்துத் திகிரியைத்தரித்துத் திகிரியையூதிவெஞ்சின
த்த, புகரிபமடர்த்துப் புள்ளினவாய்கிழித்துப் புனிதமாதுலன்றனை
வதைத்துப், பகிரதிமுடித்த வேணியங்கடவுள் பலிதவிர்த்துலகெலாம்
வளர்க்கு, முகிணிறக்கரியவச்சுதானந்த முகுந்தமா தவனடிபணிவாம். 1

வேறு.

உவரியேயகழதாகவுயர்ந்தகோபுரங்கள்சூழ்ந்த
துவரையினிலங்குகின்றதூயபொற்கோயிலின்கண்
ணவமணித்தூண்கண்மேவநலங்கொண்மாமண்டபத்திற்
றவமுறுவிதர்ப்பராசன்றந்தமின்னிருந்தாளன்றே. 2

எண்ணிரண்டாயிரத்தோடொரைம்பத்தேழுமாதர்
நண்ணியெம்மருங்குஞ்சூழநற்பொனாசனத்தின்மீதின்
பெண்ணினுக்கரசியாகிப்பிறங்குசாமரைகள்வீச
விண்ணவர்மலர்கடூவவீற்றிருந்தருளும்வேலை. 3

பரிதடந்தேர்கள்சூழப்பவமுறுசம்பரன்றன
பொருதுடற்படியின்வீழ்ந்துபொன்றவெஞ்சமரின்வென்று
சுருதியையறையும்வானோர்துதிசெயவானமீதி
விரதமீதிரதிதன்னோடெய்தினானெழில்கொள்காமன. 4

வருகின்றமதனைநோக்கிமாதவனெய்தினானென்
றிருகயனயனமாதரெழுந்திருந்தொதுங்கிநிற்பத்
திருமகளிவளோரென்றுசிந்தையினினைந்துநைந்து
முருகவிழ்கமலமங்கைமுலையிற்பால்சோரச்சொல்வாள். 5

வாடியதிருத்தானபெற்றமகனையானிழந்தநாட்கள்
சோடசவருடமாயச்சுதனுய்ந்துவளர்ந்ததாகி
லாடவர்திலகனாகிவருமிவனழகையொக்கு
மேடவிழலங்கல்சூடிவெய்துவானியாரோவென்றாள். 6

என்றவளுரைக்கும்வேலையெழில்கொடேவகிதன்னோடுங்
குன்றெடுத்தருளுமாயோன்குறுகியேநோக்குங்காலை
நன்றிகொண்மறையையோதுநாரதனெய்திஞான
மொன்றியவிதர்ப்பனல்குமுருப்பிணிக்குரைப்பதானான். 7

நீயன்றீன்றுதவுமைந்தன்மதனிவன்றன்னைநீனு
மாயஞ்செய்சம்பரன்றனவாரியினெறிதலோடு
தூயதாமகரமீனிச்சுதன்றனைவிழுங்கித்துள்ளிப்
பாயுமாதரங்கமோங்கும்பரவையுட்டிரியுநாளின. 8

வலைஞரம்மகரந்தன்னைப்பற்றிச்சம்பரன்முன்வைக்கக்
கொலைசெய்சூகாரர்கள்வாங்கிக்கோதின்மீனகட்டைப்பீழ

நலனுறுங்குமரன்றன்னைக்கண்டவர்மகிழ்ந்துநல்கிப்
புலையனுமசுரன்முன்னர்ப்பொலனுறச்சுட்டினால். 9

அரனுதல்விழியிற்றீயினெரிந்திடுமனங்கனில்லா
ளிரதியைப்பற்றிநீசச்சம்பரனேகவந்தத்
தெரிவைதன்மாயந்தன்னாலவனுக்கோர்தேவியாக
மருவமர்குழலிமாயாவதியினைப்படைத்தாண்மாதோ. 10

தூயமாவிரதிமாயைதன்னினாற்றுலங்குகின்ற
வேயுறுதோளிமாயாவதிகரத்தன்புமிக்க
நீயவன்கொடுக்கலோடுஞ்சிறந்திடுமதனைத்தேவி
மாயிருநிலத்தினேயமலிந்திடவளர்த்தாளன்றே. 11

தூயவிண்வடமீன்போன்றசுந்தரவிரதிவேளுக்
காயிரமாயமெல்லாமருளவேயீரெட்டாண்டு
போயபின்னுற்றதெல்லாம்புகன்றிடமதனன்பொங்கித்
தீயசம்பரன்றனைச்செற்றுத்துவரையிற்சேர்ந்தானென்றான். 12

முனிவனீதுரைக்குமுன்னர்முண்டகமடந்தைதாளின்
வினையகன்மதனனெய்தியிறைஞ்சிடவிதர்ப்பன்பாவை
தனயனையணைத்துமோந்துதன்முலைப்பாலையீய
வனையிருநகிலிற்றூயவமுதைவேளருந்தினனால். 13

தாயிருநகிலிற்பாலையருந்தியேதந்தையான
மாயவன்றிருப்பாதத்தின்வணங்கியமதனைநோக்கி
நேயமோடிரத்திற்புல்லிநேமியோன்மகிழ்தலோடுந்
தூயதேவகிதன்றாளிற்பணிந்தனன்றுலங்கும்வில்வேள். 14

அன்னையராளப்பிலோரைவணங்கியேயலாயுதத்து
மன்னனையவன்றாயதன்னைமற்றவன்றாதைதன்னைத்
துன்னியவன்பினாலேயிறைஞ்சினன்றூயதாய
கன்னல்வில்லாகப்பூவின்கணையினைத்தொடுக்குங்காமன். 15

சுரிகுழலிரதியாயதூயவளோங்குகின்ற
வரிகவினுறும்பாதத்தினிறைஞ்சியையங்கணைகொண்டெய்யு
மொருமகன்றன்னைப்பெற்றவுருப்பிணிதாளின்வீழ
மருகியையிருகையாரவணைத்துளமகிழ்ந்தாண்மன்னோ. 16

நவையறுகுணத்தனயனான்மறைக்கர்க்கனெய்தி
யவனியன்றிடந்ததூயோனருடிருமகனுக்கன்பா
லுவமையிலோமம்பண்ணியுயர்தவருவப்பநாமஞ்
சவளமோடுயர்ந்தமூநூற்றரித்துபநயனஞ்செய்தான். 17

அரிதிருமகன்றன்றேவியுடன்றவிசெய்தவாங்கே
சரதமாமறையோரோமத்தழலினாகுதிகள்செய்ய
விரதிகந்தரத்திற்காமனிலக்குமங்கலநாண்சாத்திக்
காதலவிரலைப்பற்றிக்கனல்வலம்வந்தானன்றே. 18

தூயவளிரதியம்மிமிதித்திடசுரர்கள்போற்ற
மாயவன்மதலைநாரிதன்னுடன்வடமீனோக்கித்
தாயினைவணங்கித்தந்தையடியினிற்றாழ்ந்துமாரன்
றீயவையகலத்தேவியுடன்சிறந்திருந்தானன்றே. 19

வேறு.

சீருறுமதனன்சுதக்கணன்சுசாருதிறன்மிகுபத்திரசாரு
சாருசந்திரன்சாருகதன்விசாருசாருயர்சாருகேதனன்றா
னேருறுசாருகுத்தனோடிவர்கள்பதின்மரையீன்றனளெழில்சேர்
பாருறும்விதர்ப்பன்றவத்தினாற்பயந்தபங்கயத்திருவுருப்பிணியே. 20

பானுவன்சுபானுபானுவான்சரதபானுசீர்ச்சந்திரபானு
தேனுறுமலங்கலணிபிரபானுசிறந்தசீபானுநற்பாரி
லூனமில்பிரகற்பானுசற்குணத்தாலுயரரிபானுசொற்கீர்த்தி
யீனமில்பிரதிபானுவோடிவரையீன்றனள்சத்தியவாமை. 21

துலங்கியசாம்பன்சுமித்திரன்வசுமானறூயவன்புரிகிரசிரத்துப் [து
பொலன்கொளுஞ்சத்சித்திரவணன்விசையன்பொறையுடைசித்திரகே
சலங்களைந்துயாந்தசகனிவாசகனோடீரைந்துதனயரையீன்றா
ளிலங்கியவடமீனனையகற்புடையாளெழிலுறவயங்குசாம்பவதி. 22

வேறு.

மாகவானிகராம்பானுசந்திரன்வயங்குகுந்தி
யாகவசிரத்திராகுசங்கனசுவசேனன்றான்
வேகவான்விருடநாமன்விளங்கியவாமன்றன்னோ
டோகையார்கவுசலனறானுதவுநாககினசித்தீன்றாள். 23

வீரியன்சுரதன்றீரன்விருடனேகலனசுவாகு
பூரணன்மாதன்சாந்திபொறையுறுபத்திரன்றான்
சூரனொண்கவியனசோமனிகரரியிவர்கடமைப்
பாரினிற்றவஞ்செய்தோங்குங்காளிந்திபயந்தாளன்றே. 24

வேறு.

தீரனொண்ணியபிரகோடன்காத்திரவானசிங்கனூர்த்துவன்கன்மாசத்தி
மாரனைநிகர்க்கும்பலன்சகனோசனவயங்கியபராசிதனசமன்
சீருறத்துலங்கும்பிரபலனுடனேசிறந்திடுபதின்மரையீன்றாள்
பாரினிலிலங்குமத்திரராசன்பயந்திடுமெபத்திரைத்திருவே. 25

விருகுயர்பவனனவிவேதனனவனனிவிழுமியகிருதத்திரனன்னி
னருளசெறியுதகன்மகாதந்துமாகுதியாயறிவினாலுயர்ந்தமன்னோத
னுருவுடையிவர்கள்பதின்மரையீன்றாளுலகெலாமொருதனிக்கோமாற்
றிரமுறவரசாளவந்திமன்பயந்ததிருமிகாமித்திரவிந்தை. 26

துலங்குசங்கிராமன்சுபத்திரன்சூரபிரகாரன்றூயவாமாயு
வலங்கொளுங்கீர்த்திமானசெயனபிரசேனனபத்திராசுவலன்வண்மை

இலங்குசத்தியகனெழில்கொடாமிரபத்திரணிவரீரைந்துபெயரை
யலங்கல்சேரளகவிலக்கணையாந்தாளருணெறியறமெலாந்தழைப்ப. 27

பாரினிலரசர்தவத்திறற்பயந்தபங்கயத்திருவெனத்திகழ்வா
ரீரெண்ணாயிரத்தோர்நூற்றுவரொத்திசகீரைந்துசுதரெனவீன்றார்
வாருறுமுலைநப்பின்னைதன்னுடனேவயங்கியவாயர்தமடவார்
தாரணிமகிழப்பயந்தனரெண்ணிறனையரையறனெலாந்தழைப்ப. 28

அரசர்கள்பயந்தமங்கையர்பதினாறாயிரத்தொருசதத்தெண்மர்
விரைசெயுங்குழலாசசியருடனிவரோரொருவர்பூமெல்லியல்சிவணை
வரிசையாலோரோர்பெண்மகப்பெற்றுமகிழவேதேவகிமைந்தன்
கரைசெயற்கரியகளிப்புடனிருந்தானக்கணமாபுலவர்கடுதிப்ப. 29

கூனிமிர்ந்தெழிலார்வடிவினிலுயர்ந்தகோதையாளபயந்திடுகுமர
னூனமிலுருவமுறுசுபலோபனெனியவுந்தவனுயாந்தே
யீனமில்புராணஞ்சுரர்முனியியம்பவறிந்திருவினைகளையகற்றி
வானவர்மகிழவரிதிருப்பெயரைமறப்பிலாமனத்துடனிருந்தான். 30

நன்பொனாமதிலினிஞ்சிசூழ்வரைநாயகன்கோயிலினுயர்ந்த
வொன்பதினாறாயிரத்தினுப்பரிகையொளிசொலவுவமையிலாமணிக
ளன்பதாயிரத்தோடிந்திரநீலமயுதமாடத்திரைழத்திலங்கத்
தன்பெருந்தேவியுருப்பிணிமுதலாநவையலாருடனினிதிருந்தான். 31

தேவியர்பதினாறாயிரத்தொருநூற்றெண்மாகருந்தனித்தனிசிறப்ப
வோவியவுருவைப்பழித்தசேடியராயிரத்தினரூழியஞ்செய்யக்
காவினுங்கமலவாவியினிடத்துங்கனகமாடபத்தினுங்களித்தே
யாவியுமுடலுமெனுமரிவையர்கட்களப்பிலாசகளிப்பளித்தமாந்தான். 32

மாயவன்பதினாறாயிரத்தொருநூற்றெண்மராமனைவியருடனு
நேயமோடிருக்குமெழிலினையறியநிசரினாரதமுனிநினைந்து
தூயயாழ்கரத்திலேந்திநற்குடைதண்டிகைகையிற்றலங்கவேதோனறி
யாயுநானமறையோரயர்ந்திடுந்துவராபதியினையடைந்தனனன்பால். 33

வேடனையருளாற்பயந்திடுநளினமின்றனைவிரும்பியசீதத
மாடியுணைமகிழ்ந்தேயிருந்துழிக்கிரிலருளாசெற்கோரதனறுந்
வீடியவினையென்றுவந்தெதிர்கொண்டுவிழுந்தியமுனிவனையினிறைஞ்சி
யாடகமணியாதனத்திடையிருத்தியருச்சியமளியுடனளித்தான். 34

தீதகன்முனிவனைபாதநீசரத்திற்சிரத்தினைமேற்கொள்ளதொளிதிகழ
மாதவன்மனைவியுடனவணிருந்துமாசுறுமனையினவாழ்க்கையினி
னேதரவுறத்தீவினைபலசெய்வேனசனைதனையகற்றுதியெனவேற
யோதலுமுனிவனைகைத்துயராசியுரைத்துளமகிழ்ந்துபோயினனால். 35

சத்தியவாமைமனையினினிலங்குமசனிசோதரிந்தயங்கச்
சித்தசன்றனையுதவியமுகுந்தனைசிறப்பொடுமார்த்திடுமெல்லை
சுத்தநெறிமுனிவனைவருதலுமினைறைஞ்சிசதாயவராயமைகள்பலபேசி
நகைதொடங்கதிநெறியளிகலாசியசர்ந்துநாரதமுனிநடந்தான். 36

தழலெனவடருங்கற்பாள்சாற்றலுமெழில்கொள்வீம
னழலுறுமனத்தனாகியரிவைநீயவன்பாற்சென்று
பொழிலிடையடைதியென்றுபுகலுதிமயலினாலே
யுழலுநெஞ்சினனைகொல்வனியானெனவுரைத்தானன்றே. 15

துனியுறவீமனிவ்வாறுரைத்திடத்துயரையோவி
வனைதல்செய்வனிதையெய்திப்பசலையாயமயல்கொள்வானை
நனிமலர்ப்பொழிலின்யானேநணுகுவனீயுமெய்தென்
றனநடையனங்குகூறமகிழ்ந்தவணடைவனென்றான். 16

கீசகனுடனிவ்வாறுகிளத்தியேவடமீன்போல்வா
ளேகினாண்மடையன்றனைநாடியம்பலுமுனிந்துவீமன்
வாசமார்பொழிலினுப்பன்மணிமண்டபமிசையின்வைக
நாசமாகீசனந்தநள்ளிருளிடையின்வந்தான். 17

தூயமாமண்டபத்திற்றுயில்கொள்வான்போலுற்றானை
யாயிழையென்றாசையாலணைதலுமின்பமறையலுற்ற
நீயனைமுடுகிவீமன்சினந்தவன்சிரத்தின்மோதி
யேயெனுமுன்னமாங்கேசவத்தைசெய்தேயகினானால். 18

மடிந்திடுங்கீசகன்றன்னனுசராமறவரெய்திக்
கடந்தருகரியையேயுங்கயவனைக்கனலினிட்டே
மடந்தையர்திலதமன்னவனிதையையனலுட்போடத்
தொடர்ந்தவர்தம்மைவீமனியக்கனாய்த்துணித்துவீழ்த்தான். 19

வனைதல்செய்வனிதையாடன்மயறனாற்கீசகன்ற
னினியதன்னனுசரோடுமியக்கனாலிறந்தானென்றே
துனியுறவிராடனோடுஞ்சுதக்கணையிடரின்வீழ
மனமகிழ்ந்தைவரோடுமடந்தைதானிருக்குநாளின். 20

படவரவுயர்த்தகோமான்பாண்டவர்பன்னிராண்டு
கடியவெங்கானினெய்திக்கரந்துறையோராண்டுள்ளே
புடவியிலவரைக்கண்டுவெளிப்படுத்திடப்போந்தூத
ரடையவேயவனியெங்குமடர்ந்திடவேவினானால். 21

கொடியமன்கூறத்தூதர்குவலயமெங்குந்தேடி
வடிவுடையவரைக்காணார்மன்னர்மன்னவன்முனெய்தி
யடவியின்வரையினாட்டினளப்பிலாப்புரியிற்காணேம்
விடசலமைவருண்டுமடிந்ததேமெய்மையென்றார். 22

ஆதுவர்மொழியக்கேட்டுச்சுயோதனன்மகிழ்தலோடு
மேதமில்கங்கைசெம்மலியம்புவான்பாணமைந்தர்
மாதவனருளில்வாழ்வோர்மடிந்திடார்குதிற்றோற்றே
யோதியபதிமூவாண்டுமொருவிடவருவரென்றான். 23

கங்கைதன்மைந்தன்கூறக்கண்ணிலானருளுஞ்செம்ம
லங்கண்மால்சகாயரானவைவர்கள்விடநீருண்டு

மங்கிலாரென்னிலன்னாருறையுமாபதியைநீயே
திங்களின்மரபின்வந்தாய்செப்புதிதெரியவென்றான். 24

அரவுயர்வேந்தன்கூறவருள்செறிகங்கைமைந்தன்
றருமன்வாழ்வளநாடெல்லாந்தருமமெய்நீதியோங்க
வரிவையர்கற்புண்டாகியாநிரைபல்கியாரு
மிருநிதியுறவேபைங்கூழெங்கணுமிலங்குமென்றான். 25

ஏசறுகங்கைமைந்தனியம்பலுஞ்சுயோதனன்றான்
மாசறுதூதர்தம்மைநோக்கியேவாரிசூழுங்
காசினிமுழுதுந்தேடித்திரிந்தநீர்கவின்கொண்டோங்குந்
தேசுயுநாடேதென்றுதெரிவுறச்செப்புமென்றான். 26

அரசனீதுரைத்தலோடுந்தூதுவரறைவராற்றின்
கரைமிசைப்பொழினீள்கன்னல்கதலிபூகமுகுசெந்நெல்
விரைசெறிந்திலங்குகின்றவிராடன்மாவளநாடென்றே
யுரைசெய்தோரற்புதங்கேண்மன்னவென்றேதுவாரால். 27

மாசகல்வனைதன்மின்னாண்மீதுறுமயலினாலே
கீசகனுசரோடுங்கிளர்ந்துறுமியக்கனாலே
நாசமுற்றனனென்றந்தநன்னகர்நவிலுமென்றே
யாசகறூதர்கூறவரவுயர்துவசன்சொல்வான். 28

கீசகன்றன்னைச்செற்றான்கேசரிநிகராம்வீமன்
மாசகல்வனைதன்மின்னாடுரோபதன்மகளேயாகு
மேசகனகரந்தன்னினால்வருமிருப்பரென்றே
யாசுறுமனத்தனாகிச்சுயோதனனறையலுற்றான். 29

விறல்செறிமல்லர்தம்மைவிராடன்மாபுரியினேவிற்
றிறலுடையவன்றன்மல்லர்திரளினைச்செற்றபோது
குறைவிலாவீமனங்கேயிருந்திடினிவரைக்கொல்வ
னறிவதற்கிதுவேநல்லகருமமென்றறைந்தான்பின்னர். 30

ஆயிரமல்லர்தம்மையழைத்தவர்க்காடைநல்கித்
தூயமாவிராடனூரிற்றொலைவிலாமல்லர்தம்மை
யேயெனுமுன்னமெய்திவதைத்திடுமென்றலோடு
மீயுயர்வரையுங்கானும்விரைவினிற்கடந்துபோனார். 31

கடிதினினெய்திமல்லர்விராடனைக்கண்டவ்வூரின்
மிடலுடைமல்லர்தம்மோடமர்செய்துவீட்டவீமன்
மடயனாண்டவரையெல்லாம்வதைத்தொருமலனைவிட்டா
னிடையனாங்கவன்றனைச்சென்னிபின்னுறத்திருப்பிவிட்டான். 32

கடிதினினவன்றானெய்திக்கண்ணிலான்மைந்தனோடு
மிடலுடைமல்லரவ்வூர்மல்லரைவீட்டலோடு
மடையனாண்டவரையெல்லாம்வதைசெய்தேயென்னைவிட்டா
னிடையனென்வதனம்பின்னேயுறத்திருப்பினனீதென்றான். 33

என்றிவைமல்லன் கூறவெதிரிலாச்சுயோதனன்றான்
கன்றியமனத்தனாகிக்கவெந்திரட்பகைஞர்பாரிற்
பொன்றினதில்லையென்னாப்புகன்றவன்விராடனாட்டிற்
றென்றிசையேகிச்சிந்துநாடநீசெருச்செய்யென்றான். 34

சிந்துவுக்கிறைவன்றேரினேறிதென்றிசையினேகி
வந்தெதிர்பொருதுசீறும்விராடனைவரிவிற்கோலி
யுந்திபெகழிதன்னாலொண்சிலையிரதம்பாரிற்
சிந்திடவறுத்துததோளைப்பிணித்தனன்சேனையார்ப்ப. 35

விறலுறுஞ்சிந்துநாடன்விராடனைப்பிணித்தலோடு
மறலிபோற்சீறிவீமன்மைத்துனன்றன்னைப்பற்றித்
திறலுடைக்கரத்தினாலேசிரத்தினைத்திருகுமுன்ன
மறன்மகன்விலக்கலோடுமோருயிருய்ந்துபோனான். 36

சிந்துவுக்கிறைவனோடுவிராடனைத்தேரினேற்றி
யந்தமாரறன்சேய்வீமனருச்சுனற்கிளையவீரர்
தந்திவெம்பரிமாசசேனைதரணியினிறைந்துசூழச்
சிந்தையின்மகிழ்வினோடுந்தேரிடைசசெல்லும்வேலை. 37

அத்தினபுரியையாள்வோனாநிரைகவர்ந்துகொண்டே
வுத்தரதிசையினெய்தவுத்தரன்முனிவினோடும்
வித்தகவிசையனேயவீரர்கடம்மையெல்லாங
கைத்தலக்கணையினாலேவதைசெய்வன்காண்டியென்றான். 38

வசையிலாவிராடராசன்மகனிவைகூறலோடு
மசைவில்கற்புடையளாயதுரோபதையவனைநோக்கி
விசையனுக்குவமைநீயோமின்மினிவெள்ளியாமோ
சசிகுலவலனைத்தூக்காதெள்கல்சாற்றுதியோவென்றாள். 39

வீடுமன்விதுரன்கன்னன்வேதியனவன்றன்மைந்தன்
கோடுகொண்முழக்கிவெய்யகொடுஞ்சரம்பொழியும்போழ்தி
னீடியபகழிதூவிநீயெதிர்நிற்கலாற்றாய்
பேடிதேரூரில்வெல்வையென்றிவைபேசினாளால். 40

வித்தகவைவர்தேவியானமின்கூறலோடு
முத்தரன்றங்கையானவுத்தரைதன்னைநோக்கி
யத்தினபுரியையாளுமரசனையமரின்வெல்லச
சித்திரமணித்தேர்பேடியூர்கெனசசெப்புகென்றான். 41

சீருறுமுன்னோன்கூறசசிறந்தவுத்தரைதானேகி
யேருறும்பேடிதன்னையிருகையாற்றழுவிநோக்கி
நேரிலொன்னலரைவெல்லநீயெந்தைசுதனுக்கின்று
தேரினையூர்தியென்னவிசைந்தவன்சென்றானன்றே. 42

ஓதுதற்கரியபொற்றேருத்தரைதோழியூர
வேதமில்விராடன்சேயத,னேகியேசுயோதனன்றன்

போதகமிவுளிவீரர்புணரிபோலார்ப்பக்கண்டு
பீதியோடோடலோடும்பேடிகைபிடித்துச்சொல்வான். 43

செருவலவொருமைச்சிந்தைசேர்க்கலாய்ப்படியிற்பாற
னிருபருக்கடுக்குமோதானீயின்றுவெருவலென்னா
வரனொடுநடித்தாள்கோயிலனாகியாயுதங்களெல்லாம்
விரைவினிற்காட்டலோடுமுத்தரன்விளம்பலுற்றான். 44

பாரியகதையும்வில்லும்படைகளுமாரதென்ன
வேறுபாண்டுமைந்தரெக்குமாயுதங்களென்றான்
நேரிலாக்குந்திமைந்தரெங்குளார்நிகழ்த்தியென்று
வீரவுத்தரன்றான்கூறவிசையனாங்கறையலுற்றான. 45

மறையவன்றருமன்வீமன்மடையன்மாவலவனீதி
யறிவுறுநகுலனாயனாகியசாதேவனான
மறுவிலாவுந்தைதன்பால்வயங்கினர்வனைதல்செய்வா
னெறியுறுபாஞ்சாலன்றன்மகளெனநிகழ்த்தினானால். 46

பீடுடைவிசையன்கூறவுத்தரனபேசுவானெண்
ணாடவர்திலகனானவருச்சுனனெங்கேயென்னப்
பேடியாம்யானேபார்த்தனென்னறுபேர்பத்தும்பேச
வாடுறுமாலையோடுமெவயங்கினனகிரீடியம்மா. 47

வித்தகவிசையனாகிவிளங்கிநின்றானைநோக்கி
யுத்தரன்பணிதலோடுமுவந்தெடுத்தணைத்துக்கொண்டு
சத்துருவெனவேயெய்துநிருபரைச்சமரின்வெல்லச
சித்திரமணித்தேரூர்திநீயெனச்செப்பினானால். 48

உத்தரன்றேரையூரவுத்தமவிசயனேகிக்
கைத்தலத்துயர்காண்டீபங்கடிதினில்வளையவாங்கி
யத்திரமாரிபெய்தேயாநிரையெல்லாமீட்டாண்
டெத்திசைதோறுமொன்னாரிரிந்திடக்கணைபெய்தார்த்தான். 49

மறையவனவன்றன்மைந்தன்வானதிபுதல்வன்கன்ன
னிறுதியின்மழையையேலவெய்தவரார்ப்பப்பார்த்தான்
மறுவிலாவாளியெய்துமாற்றியேயவர்கள்கையி
னுறுசிலைகொடிதேரெல்லாமறுத்திடவோடினாரால். 50

அரவுயர்வேந்தனெய்தியடுகணைசொரியப்பார்த்த
னொருகணையதனான்மாற்றியுரத்தொருவாளியேவ
வெருவியேகுருதிவாயின்வீழ்ந்திடநிருபரோடு
மரிவரக்கண்டதோல்போலவனியினோடினாரால். 51

வானதிபுதல்வன்கன்னன்மறையவனிவுளித்தாமா
ஊனமேமலியுந்துச்சாதனனுயர்சுயோதனன்றா
னீனமேமலியப்பாறவெழில்கொண்மாவிசயன்பாரி
னாநிரையடையமீட்டானமரர்கடுதிப்பவம்மா. 52

ஏதமில்விராடன்சேயோடிந்திரன்செம்மல்சொல்வான்
மாதுதானலாதபேடியாகியேவருவன்போரின்
வேதியன்முதலோர்தம்மைவென்றுநீநிரைமீட்டாயென்
றோதவேதூதர்தம்மையுந்தைபால்விடுத்தியென்றான். 53

ஈதுறவுரைத்துப்பேடியாகியேயிரதமூரத்
தீதுறுசுயோதனன்றன்சேனையோடிமைப்பின்முன்னம்
பீதியோடோடயானேவென்றனனென்றுபேசித்
தாதைபால்விடுத்தான்றூதர்தமையுத்தரன்றன்மன்னே. 54

வீடுமன்முதலினோரைவென்றான்சேய்மீண்டானென்றே
பீடுடைவிராடன்முன்னரெய்தியதூதர்பேச
நாடுடையரசர்கோமானலனுறுமகிழ்வோடெய்தி
நீடியகோடிகள்வானினிறையுமாநகரிற்சென்றான். 55

இரவிசேய்முதலினோரையிமைப்பின்முன்வென்றன்மைந்த
னிரையினைமீட்டானென்றுதூதுவர்நிகழ்த்தலோடுங
கரைசெயற்கரியதாயகளிப்புடன்மறையோன்றன்னோ
டொருவிசைசூதிறறேற்றமன்னவனுரைக்கலுற்றான். 56

வீடுமன்முதலினோரைவென்றவென்சுதன்போலிசூ
தாடியேவெல்வனென்னவரவுயர்வேந்தனபாற
நீடியபகழிதூவிநின்மகன்செயிக்கமாட்டான்
பேடியேவென்றானென்றுபேசினன்மறையோன்மாதோ. 57

வேதியனுரைத்தலோடுமெலிவுடனென்றன்மைந்த
னுதவனெனவேயேகியரசரையமரின்வெல்லத்
தீதுறுபேடிவென்றானென்றனையென்றுசீறி
யேதமில்பலகைதன்னிலெறிந்தனன்கவற்றைமன்னன். 58

பற்றியேயெறியத்துய்யபலகையிற்றைத்துமீதி
னுற்றிடுகவறுசென்றேயொளிதிகழ்வேதியன்றன்
னெற்றியிற்றாக்கலோடுநிறைநதிகுருதிசோர
விற்றொழில்விராடனுஞ்சேயினியனவிளம்பும்வேலை. 59

உவமையிலிரதமீதினுத்தரன்பேடியோடு
நவமணிவயங்கும்வீதிநண்ணியேமாதர்வாழ்த்தப்
பவமறுதந்தைபாதம்பணிதலுமைந்தன்றன்னைத்
தவமுறுமன்னனன்பாற்றழுவியேமகிழ்ந்தானன்றே. 60

வேறு.

தாதையோடொளிர்மணிக்கோயில்சார்ந்தவன்
றீதுறுசுயோதனன்சேனையார்ப்பவே
பீதியாலோடினன்பேடியாகிய
வேதமார்விசயனேசெருவென்றானென்றான். 61

வேறு.

மறையவன்மடையன்கோலமாவலன்கோவலன்றன்
பொறையுறுபாண்டுபெற்றபுதல்வர்நால்வருமேகண்டாய்
மறுவிலாவனைதல்செய்யுமடைந்தைதானுரோவென்னி
லறிவுறுபாஞ்சாலன்றனருளியவரிவையென்றன். 62

விற்றொழில்விசயன்றன்னோடிவர்களுமேவியேதா
னுற்றனரிவணியென்றேயுவகையார்மைந்தன்கூறக்
குற்றமில்விராடராசன்மகிழ்வொடுங்கோதிலாத
நற்றவத்தருமராசன்முன்னரினண்ணினானால். 63

வேறு.

மைந்தனோடெய்தியேவிராடமன்னவ
னந்தமாரறன்சுதனடிபணிந்தெழிற்
செந்திருவனையவுத்தரையைச்சீருறு
மிந்திரன்மதலைக்கின்றீவனென்றனன். 64

தீதிலாவிராடர்கோன்செப்பலோடுமே
நீதிசேர்பற்குனனீயுன்கோதையை
யாதவன்மருகனுக்கீதியென்றுதா
னோதியேயவனருளுதகமேற்றனன். 65

அரிவையையரிமருமகனுக்கன்புறத்
தருதியென்றுயருமாவிசயன்சாற்றலு
மிருவினைதுணியக்காமத்தினெய்திலாப்
பெருமையனிவனெனத்தருமன்பேசுவான். 66

நீதியுந்தருமமுநெறியுமாண்மையு
மாதவாவியாந்திமொதர்சுற்றமு
மேதமிலெம்பியாமவிசயற்கெய்துமென்
றோதியேமகிழ்ந்துயாதருமனுற்றனன். 67

பாண்டவர் துசேகுரதவாசப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் – 3092.

---

## 116 - வது, உத்தியோகப் படலம்.

தந்தைதாய்மனையுளாடனயரொன்றுறுஞ்
சிந்தையாம்பவமெனுஞ்சிந்துநீந்தொணா
வுந்திடும்பிறப்பிறப்பொழியவேண்டுமே
லிந்திரைகொழுநனையேத்திவாழ்மினோ. 1

சூரர்களவருஞ்சூதிற்றோற்றபின்
னீராறுவருடமாவனத்திலெய்தியே

வீரியவிராடனூர்மேவியேகரந்
தோரொருவருடம்வெந்துயரந்தள்ளியே. 2

கரந்துறைகாலமொன்றேகவேகவின்
பொருந்தியமெய்யினர்புகலுமாரணந்
திருந்தியமறையவர்திரளினோர்க்கெலாம்
விருந்தினராகியேவெளிசெயதாரரோ. 3

மாதவவிராடமாபுரத்தின்வைகியே
வேதனையொருவியேவெளிசெய்தோமென
யாதவன்றனக்குநீரியம்புவீரெனத்
தூதனையேவினன்றாயதன்மனே. 4

ரேயெனுமுன்னரிற்றுவரையெய்தியே
மாயவனடிமிசைவணங்கியைவரரந்
தூயவர்செயலெல்லாஞ்சொல்லினாரரோ. 5

மன்னவரைவருமறுவிலாதுயர்
யினனிடையாளொடும்வெளிசெய்தாரெனச
சொன்னதூதுவர்க்கெலாஞ்சுவர்ன்னமீந்தனன்
பன்னகப்பாயலிற்பள்ளியோவினன். 6

மாதவரெணசுபத்திரையென்னுமங்கையோ
டாதவனெனவயங்கபிமன்றன்னோடு
மீதுயர்தேர்மிசைவிளங்கத்தோன்றியே
சீதரனவிராடமாநகரிற்சேர்ந்தனன். 7

மாயவனதேர்மிசைவரலும்பாண்டவ
ரேயெனுமுனனரினெயதியின்புறத
தூயவனடிமிசைவணஙகசசோதியோ
னேயமோடணைததனனிகரிலவவைர. 8

துடியிடைததுரோபதைதாயகணணினீர்
படிமிசைநிறைநதிடப்பணியயாதவன
கடிமலர்க்குழலியைக்கையினாலணைத்
திடாறவினியசொல்லியமபினனரோ. 9

வீரியவபிமன்வநதடியின்வீழதலு
மேருறுமைவர்மெயயிறுசப்புல்லினார்
சீருறுதுரோபதனமகடனசேயரோ
டாரமார்பொளியுறவணுகினனரோ. 10

இன்னலில்விராடனூரிலங்கலைவர்கண்
மின்னிடையாளொடுமெவெளிசெய்தாரெனப்
பன்னகப்பாவையுமபாண்டிநாடியுந
துன்னியமகிழ்வொடுஞ்சுதரொடெய்தினர். 11

தென்னவன்சீருறுசோழன்சேரனு
மன்னவன்கேகையன்முதலினோர்கண்மாத்
துன்னியவிரதமேற்றுலங்கித்தோன்றியே
யின்னலின்விராடன்மாநகரியெய்தினார். 12

அத்தினபுரியின்மன்னநயமெங்கணு
நித்திலமனையிலோதனநிறைத்திட
மததிரன்மன்னவன்வழிநின்றேயவை
மெய்த்தருமன்றெடுவிளம்பியேகினான். 13

நத்தொடுதிகிரிகைதிகழுநாரணன்
மைத்துனன்மாரொடுமெகிழவேதிசை
யத்தியைநிகர்த்திடுமெபிமனேரிலா
வுத்தரைதன்னையேயுவந்துவேட்டனன். 14

துன்னுமிந்நலனுறததுலங்குமைவரா
மன்னவர்தங்களைமாயனோக்கியே
பன்னகத்துவசன்பாற்பாரைவேண்டியே
யின்னலிலொருவனையேவுமென்றனன். 15

மாதவன்மொழிந்திடவுதிட்டிரமனன்
றீதுறுசுயோதனனருகுசென்றுயர்
நீதியின்வருமரசளித்தியென்றுநீ
யோதுதியெனவுலூகனையங்கேவினான். 16

வேறு.

அரவுயர்வோந்தன்றன்பாலேகுமந்தணனையூங்கார்
தருமநீயென்பாலெயதவரவிடுகென்றுசாற்றித்
திருமகள்கணவன்றேரிலேறியேதேவரேத்த
விரைசெறிபொழில்கள்சூழுந்துவரையின்மேவினானல். 17

துவரையின்மாயோனெய்தத்தூயவேதியன்றனேகி
நவையுறுசுயோதனன்பாணண்ணியேதருமன்பாதி
யவனியையீதியென்னவவன்மறுத்திடலுமீண்டு
பவமறுமறையோன்பாணுமெதலைக்குப்பகர்ந்தானன்றே. 18

தீயவனுரைத்ததெல்லாஞ்சென்றுநீமறையோய்தூய
மாயனுக்குரைத்தியென்னவறனருண்மைந்தன்கூற
வாயர்நாயகன்முனெய்தியசேதனச்சுயோதனன்ற
னீய்கிலேனவனியென்றனென்றுவேதியனுஞ்சொன்னான். 19

அந்தணனுரைப்பக்கேட்டேயருள்செறிமறையோயேகி
யிந்திரன்சுதனையென்பால்வரவிடுகென்றேயேவி
யநதமாரிரண்டுபீடமடிமுடியருகினைகநிச
சுந்தரன்றுயில்வான்போலத்தூயமெல்லணையிற்சேர்ந்தான். 20

திருமகள்கொழுநன் றுய்யசேக்கையிற் றுயில்கொள்வேலை
யரியையாகவத் துக்காக்குந துணைகொள்வானுகியாங்கே
விரைவினிற்சுயோதனன் ற்ன்மேவியேயுலகமுண்ட
பெரியவன் முடியின் பக்கப்பீடமேலிருக்கும்வேலை. 21

கடிதினின் மறையோனெய்திக்கவினுறுந்தருமனேமும்
படியினையளந்தோன் றன்பாற்பார்த்தனை வரவிடென்றுன்
கொடுமையி ரசவென் றுகூறலும்விசயனெய்தி
வடிவுடைமாயன் பாதமருஙகினர்பீடத்துற்றுன். 22

இயல்புறுவிசயனெய்தலோடுமேவவிறைவனுங்கே
துயிலுணர்பவன்போன் முன்னந்தூயவன் றன்னை நோக்கிக்
கயவனை யதனபின்ன கண்டுமெய்யழுந்தப்புல்லிப்
புயல்வணனிருமீங்குபோந்தமைபுகலுமென்றுன். 23

முற்குணனமொழிதலோடுமுன்னர்யான்வந்தேனென்று
துற்குணனெனககுநீயேசமரிடைத்துணையாகென்னப்
பற்குணன்முன்னரென்னைக்கண்டனைபரமவென்ன
நற்குணன் கயவன் றன்னை நோக்கியேநவிலலுற்றுன். 24

முன்னநீயெய்திறுலுமுகிலினை யூர்திமைந்தன்
றன்னையான்முன்னர்நோக்கிப்பின்னுனைக்கண்டேன் ருழ்வில்
மன்னயான்முன்கண்டார்தம்வசத்தனுயடைவேனென்று
சொன்னவன்சுதர்கடம்மைசசுயோதனனறனக்காண்டீந்தான்.

இந்துசேகரனை நோக்கியியான் றவமுயன் றுபெற்ற
மைந்தரோடக்குரோணிமறவிலாசசேனையெல்லாந்
தந்தனனுனககென்றேசசககரமெடுப்பாயல்லை
நந்தொளிர்கரத்தாயென் றுநவின் றவனேகினுனல். 36

அரவுயர்வேந்தனேகவருச்சுனனேடுமையன்
விரைவினிலிரதமேறிவிராடமாபுரியினெய்தத்
தருமனேடைவரெயதியிறைஞ்சலுந்தழுவியன்பா
னிருபாகணிறைந்துசூழநேமியோனமருநாளின். 27

சோமனேர்கவிகையோஙகசசுயோதனன்பதியினெய்தி
மாமன்வான திதன் மைந்தன்மைத்துனன் கன்னனேடே
காமஞர்ஜ க்காமனகாளைதவ்வசததனுக
நேமிமால்கரதெடாமனிறுத்தினனென் றுசொன்னுன். 28

அகங்ரமதசாலவாழு ரவயாவேந்தனகூற
விககிரமதான் ீசகவீமெனவ்ளமபலுற்று
னுக்கிர ய்ப்போசன்னி றுதிட்டிரனிடைந்தான்மாயன்
சக்கரமெடுத்தறிணனஞ்சமரிடைக்காண்டியென்றுன். 29

அஞ்சனவண்ணனுழியெடுத்திடினமரினுற்ருய்
வஞ்சுகச்சூதின்வெனறமண்ணினையருடியென்றே

செஞ்சொலாற்கங்கைமைந்தன்செப்பமன்சீறியேகச்
சஞ்சயன்றனக்குத்தீயவந்தமன்சாற்றலுற்றான். 30

விரைவினிற்சிவிகையேறிவிராடன்மாபுரியினையதித்
தருமனைநண்ணிநீயேசமர்பொரநினைந்தாயாகிற்
குருவொடுதந்தைசேனையிளைஞரைக்கொன்றேயாரு
மாசினிவதீர்த்தங்களாடுதனன்றென்பாயால். 31

நீதிசேயதருமராசனினக்கடாச்சமரஞ்செய்தா
லேதமார்நிரையந்தன்னுளெய்துவாயிவையைத்தள்ளி
மாதவம்புரியெனனுனறன்றந்தைசொல்வழங்கினன்றனென்
றோதியேசமர்மூளாமலொழித்துநீவருதியென்றான். 32

அரவுயர்வேந்தன்றந்தையருளவேசஞ்சயன்றான்
றெரிமணிச்சிவிகைமீதிற்றிசைமுனென்னவேகி
விரைசெறிபொழிலகழ்வாங்குமவிராடன்மாபுரியினையதித்
தருமன்றனையசலோகபவனிவணடியிற்றாழ்ந்தான். 33

தருமனேசகிநேரில்சஞ்சயன்மொழிவானுந்தை
யுரையினைக்கேட்டிதூயவுறுதவத்தொருவனாகி
யருவினைதுடைத்தீசானமர்பொரநினைதியாகிற்
குருவதைமுதலாயவெவ்வயமகாவினைசேருமென்றான். 34

இன்னலார்சுயோதனன்றானென்றுமென்வசனங்கேளா
னன்மொழியாகமுன்னவன்றனவையெல்லாங்கேட்டாய்
துணிவினையுரைத்தூயநலம்புரிதியெனறு
மன்னவனுரைத்தனன்மையைந்துபூயமசொலலிந்தான்றான். 35

சஞ்சயன்மொழியைக்கேட்டுத்தருமன்வெண்முறுவல்செய்தே
விஞ்சியசமரபூமிமிடைந்துநாபோர்செய்யாம
லஞ்சினவரசரோழாதிக்காதத்தினைடைவரென்று
செஞ்சொற்றமைறந்தோதும்பொருளினைத்தெரித்தியென்றான்.

ஆதலினமைமுனனோதும்பருந்தவகேட்டிவஞ்சச்
சூதினிலவென்றநமனனாறுவாதெசத்துடனேராண்டிங
கேதமாரவனத்தின்கண்ணியகரந்திவணையதினேர்கசெம
பாதிநாடியானுமிலமர்செயப்பணித்தியென்றான். 37

இயல்புறுதருமனிவ்வாறுரைத்திடச்சஞ்சயன்றான்
செயலுறுசிவிகையேறிச்சென்றிபநகரிற்சேர்ந்து
நயனமில்வேந்தனேடேயிவையெலாநவிலலோடு
துயருறுமனத்தனாகியிருந்தனன்றூயமையிலலான். 38

சஞ்சயனுரைத்தவாறுந்தானசற்கிசைத்ததெல்லா
மஞ்சனவண்ணமாலுக்கறைந்தனன்றருமராசன்
கஞ்சனைக்கொன்றோனுங்கள்கருத்தினைத்தெரியக்கூறு
மெஞ்சன்மன்னவரேயென்னவறன்சுதனியம்புகின்றான். 39

மாதவகேட்டிவெம்போர்மலையும்போதிளைஞர்தம்மை
தாதையைக்குருவையொப்பில்பிதாமகன்றன்னைசசெற்றே
யேதம்வந்தடையாவண்ணமிரவிசேய்சசகாயன்முன்னர்
தூதுநீம்போகவேண்டுஞ்சுருதிநாயகனேயென்றான். 40

அறன்மகன்கூறலோடுமெடுசினத்துடனேநோக்கி
விறலுடைவீமனாயயவிசயன்மாநகுலனவேத
நெறியுறுமிவர்கள்மூவர்நேமியாயநீதூதேகிற்
சிறுமையாயமுடியுமென்றேபின்னருஞ்செப்பலுற்றார். 41

மறனுறுஞ்சூதினாலேமண்கவர்ந்ததுவுமன்றி
யறனுறுதுரோபதன்றானருளியவணங்கினாளை
நிறைமலர்க்குழலைப்பற்றிநெடுந்துகிலுரிவித்தான்பா
லிறைவநீயிரந்தமண்ணுணடிருப்பதோவீரமென்றார். 42

ஒன்னலனாகிவாழுமுரககேதனனைசசெற்று
மின்னிடையணங்கினுடன்விரிகுழனமுடிக்கவோஙகு
மினனிலத்தமரின்வெனறேயேகவெணகுடைக்கீழாளா
மன்னவனுடனேயாஙகள்பிறப்பதென்மாலேயெனறார். 43

மிகமுனிந்துழன்றுவீமன்விசயன்மாவலவன்கூற
நிகரிலாமாயோனேகநீதிசேர்தருமன்சொல்லை
யிகழ்கிலீர்தருமமவென்றியீநதிடுமென்றுசொல்லி
நகுலன்பின்னவனைநோககிநவிலுநின்கருததையென்றான். 44

மாதவன்மொழியககேட்டுமெதிரைக்கிளையமைந்த
னேதுவானையநீதானுரககேதனன்பாலின்று
தூதுதானேகிலென்வாழ்சுயோதனன்மடியவெம்போர்
காதநீநினைநதாலெனனுன்கருத்தையாரறிவரென்றான். 45

குரகதவலவன்பின்னோன்கூறிடவவனைநோக்கி
முருகவிழ்தொடையாய்நீயுனமுன்னவர்போற்சொலாதே
விரகிவனுரைததெல்லாம்விளம்பெனததனிததுககூற
நிருகன்றன்வெஞ்சாபந்தீர்த்தநிமலனோடுரைப்பானன்றே. 46

அவனியின்பாரநீககவரசனாயநிலததிற்றோன்றிப்
பவர்களானவரையெல்லாம்படிமிசைவதைததுவீழ்க்க
வுவமையிலரியேயெம்மையுரககேதனன்றனோடே
நவையுறுவிரோதஞ்செய்யுமாயமயானறிவனென்றான். 47

சீருறுசாதேவன்றான்செப்பியவிரகுகேளா
வாரியனவனைநோக்கியறைகுவானவனிதன்னிற்
பாரம்யானகற்றவண்ணமுபாயநீபகர்தியென்னச்
சீரியநகுலன்பின்னோன்செறுழதிலைசெப்பலுற்றான். 48

வரிசிலைவிசயன்றனனைவதைததுயர்மங்கைசென்னிக்
கரியமைதகுழலைநீககிக்காலினிற்றளையைப்பூட்டி

யிரவிசேயரசையாள்வித்துயானுனைப்பிணிப்பனாகிற்
றரையினின்வதைசெயவோரைத்தடுக்கலாமென்றுசொன்னான்.

மத்திரைக்கிளையமைந்தன்மொழிந்திடமாயனோக்கி
யித்தனைவகைசெயதாலுமென்னைநீபிணிப்பதெங்ஙன்
னுத்தமாவுரைத்தியென்னவுனக்குநானடியனாகிய
பத்திசெயமதியினாலேபற்றுவனுனையென்றான். 50

குரகதவலவன்பின்னோன்கூறலுமனந்தரூப
மரகதவடிவாயவிற்கவனத்தினாவிரையிற்போங்கன்
றொருருகுதிகொண்டுதாயையுணர்ந்துறவடைந்தசீர்போற்
பரகதியருளும்பாதத்திணையினைப்பற்றினானால். 51

தூயவன்மனத்தினாலேசோதிதன்றுளைபபற்ற
மாயனுமகிழ்ந்துநீயோவரத்தினைவேண்டுகென்ன
வாயுதகுருவின்சேயாலவரைவதைசெயயாம
னீயருள்செயதியென்னநெடியவன்பெறுதியென்றான். 52

மைத்துனனறன்னைமாயன்மகிழ்வொடுந்தழுவித்துய்ய
மெய்த்தருமன்றன்முனனரிருவருமேவலோடு
மத்தியினமர்வோன்றீயவரவுயர்த்தவன்பாற்சேர
லுத்தமமென்றுசொனனானுயர்சகாதேவன்மன்னோ. 53

பின்னவன்கூறலோடும்பிறங்கியநெறியின்மிக்க
மன்னவனெழிலிபோனறமாயவன்றனைநோக்கிப்
பன்னகத்துவசனறனைபபாதிநாடிரந்துகேட்டி
யன்னவனமறுக்கிலேந்தாகொடேனெனிலமர்வேண்டென்றான்.

தூயமாதருமனிவ்வாறுரைத்திடத்துயரமுற்றே
வேயுறுதோளினாடன்விழியினீரகற்றிமாய
னீயினியிரங்கவேண்டாநின்குழல்முடிப்பிப்பேனென்
றேயெனுமுன்னரத்திப்பதியினினெய்தினானால். 55

நிகரின்மாலெய்துந்தன்மைநிகழ்த்தலுஞ்சுயோதனன்றன்
பகலவன்குமரன்றாயபகீரதிமைந்தன்சிந்தை
மிகமகிழ்விதுரன்சூழவெதிர்கொளமேவலோடுஞ்
சகுனிதானிடைவந்தெய்தித்தடுத்திவைசாற்றலுற்றான். 56

அரவுயர்வேந்தாகேட்டியசுதனிவனென்றெண்ணிப்
பரிவுடனெதிர்சென்றாலிப்பாருறுநிருபரெல்லாந்
தருமனானையினீண்டெய்துந்தூதுவனறனக்குநீதான்
வெருவினையென்றுசொல்வரென்றவன்விலக்கினானால். 57

மதியிலாச்சகுனிகூறமருளுறவிருத்தலோடும்
விதுரன்மாமறையோனறூயவீடுமன்கிருதவன்மா
வெதிருறவிவர்களெய்தியிறைஞ்சலுமெழில்கொண்மாயன்
சதுமறையவர்கள்போற்றத்தமனியத்தேர்மேல்வந்தான். 58

னிடையனென்னுழையின்வந்தாலெதிரெழுந்திறைஞ்சக்கண்டாற்
படியுறுநாடொற்றிப்பருந்தளையிடுவனென்றான். 68

அரவுயர்வேந்தனிவ்வாறுரைத்தவணிருக்கும்வேலை
திருமகள்கொழுநனெய்தச்சிந்துவக்கிறைவன்றூய
விரவிசெய்சகுனியல்லாரெழுந்துநின்றிறைஞ்சமாழைச்
சரியிலாப்பீடமீதிருந்தனன்சார்ங்கபாணி. 69

எதுகுலமன்னனெய்தியிருத்தலுமெரியுநெஞ்சன்
மதிகுலமன்னனாவாளரவுயர்த்தகோவென்
பதியிடையடைந்துமின்றென்பானமணிக்கோயின்மேவாய்
விதுரனில்லிருந்ததன்மைவிளம்புதிதெரியவென்றான். 70

நீதிறசுயோதனன்றான்செப்பியவுரைகேட்கோ
மாதவன்மொழிவானின்றன்மணவரவிடவுன்பால்வந்த
தூதனுயுன்னிலன்னமருந்திநான்வெறுக்கைதூயசோ
வாதலாலவிதுரனில்லினமர்ந்தனன்னென்றுசொன்னான். 71

யாதவனிவ்வாறோதவனலுறுநெஞ்சனாகிச்
சோதுறுகுணத்தனாயசுயோதனன்கூறலுற்றா
னேதமார்விராடன்றன்பாலிழிதொழில்செய்யுமைவர்
தூதனாய்வந்ததன்மைசொல்லுதிதெரியவென்றான். 72

பன்னகத்துவசனிவ்வாறுரைத்திடப்பரமன்சொல்வா
னுன்னுடனொருதிறஞ்சேர்ந்தேயுரைத்திடப்பதுமூவாளே
துன்னியவனைத்திமெனயதிவருந்தியுமாந்துதூய
மன்னவாவெளிசெய்தார்க்குவழங்குநீயவனியென்றான். 73

யாதவனுரைப்பக்கேட்டேயறனருண்மைந்தனனு
சூதினிறந்தோற்றநாட்டைவிபினிலனிகழ்ச்சொன்னே
வீதலுக்கிசையேமென்னவியாதவனவாக்காற்றநாடிற
பாதிதானீதியென்னமறுத்தனனபவங்காமனெஞ்சன். 74

மதிகுலத்தைவர்நாட்டிற்பாதிதான்வழங்கேனென்ன
வெதுகுலத்திறைவனேந்துரிதிவையனறிந்துமேனைட
வுத்தியின்விடமேபோலவுந்தேதனனுஞ்சிறித
ததிகளவாவொயானைறருகிலென்னெனாமசொன்னான். 75

அந்தமன்சிறுவனேதுங்கொடேனெனவரியிபபாரை
யிந்துநனனுதலியாளசிறந்தவைசுத்தனுக்கீந்த
சந்தனுதனயனுனறனகுலத்துளளானேறதாழ்வி
லுநதைதன்னிளையோன்மைந்தர்க்குரியநட்டிலையனறான். 76

சுந்தரனிவ்வாறோதச்சுயோதனனைந்துசொல்வான
றந்தையரைவர்தாயுமொருத்தியேதாமெலலோருஞ்
செந்துவர்வாயாளாயதுரோபதைதன்னைச்சேரு
மந்தமிலிகழ்வினறோவொருகுலத்தரசரென்றாய். 77

குயின்மொழிமடந்தைசுற்றுங்கூறையையவையின்வாங்க
வியல்பறநாணமேகவிருந்துகண்டவருக்காகித்
தயிர்களவினிலுண்பாயுன்சதுரினாலைநூர்சேட்டாய்
மயிர்நுதிமண்ணுமீயேன்மறுத்துரைசெயயேலென்றான். 78

மெய்யறுகுணத்தனை வியாளகேதனன்றான்சொல்ல
மையறுமலரின்மீதின்மங்கைநாயகனுஞ்சொல்வான்
பொய்யறுகுந்திதேவிபுதல்வரோடமர்க்கீசெய்யக்
கையறையென்றலோடுவகனன்றுதாணறைந்துசொல்வான். 79

எதுகுலவழியிற்றோன்றியிடையர்தம்மில்வினையப்பால்
ததிகளவினிலேயுனைத்தாம்பினாலடிபட்டோடு
மதியிலியுன்னையோராய்மாசறுபிறப்பாமென்னைப்
பதிதனீசைபோடென்றுபகர்ந்தனையென்றுநக்கான். 80

தீயவனிவைகளெல்லாஞ்சினத்துடன்செப்பலோடு
மாயவன்முறுவல்செய்துமணிமுடிதுளக்கிவானின்
றாயவான்முகிலேபோலக்கலன்மெயிற்றுலங்கவேகி
மீயுயர்துவசத்தேர்மேல்விதுரன்றன்கோயில்புக்கான். 81

எதுகுலத்திறைவனேகவெரியுறுநயனனாகிக்
கதமுறுமனத்தன்காந்திக்கண்ணிலிமதலைசொல்வான்
பதிதனாமிடையன்னைப்பரமனாமென்றுபோற்றி
விதுரனல்விருந்துசெய்தானென்றுரைவிளம்பலுற்றான். 82

ஒருவனுக்குயிர்வார்போலுருகியேயவனைவிட்டே
யிருநிதியதிகமாகவீந்தவனதன்னைப்பற்றும்
வரைவிலாமகடானபெற்றமதலையாமென்றெல்லோரு
தெரியவேவிதுரன்செய்தசெய்கைநன்றென்றுநக்கான். 83

வல்லியமெனவேசீறிமதியிலானுரைப்பக்கேளாச
சொல்லியநாவைவாளாற்றுணித்துநின்சிரம்பார்வீழக்
கொல்லுவன்முன்னேனைச்சேயாயபிழைத்தனையென்றுகூறி
வில்லினைமுறித்துவீழ்த்துவிதுரனேபோயகோயிலபுக்கான. 84

ஏதமில்விதுரன்வில்லைமுறித்ததுதன்மனையினெய்தப்
பூசலத்தரசர்புன்மைபுலலாலாமெனத்தேறக
கூதுறுமனத்தனெண்ணிக்குருகுலத்தொருவர்க்கும்பொய்யா
மாதனமியற்றிமாலைப்பணிந்திடவழைமினென்றான். 85

தூதுவரெய்தியேகயோதனனழைத்தானென்ன
மாதவனைத்தாண்டெய்திவியாமருளமரும்பொய்யா
மாதனமிசையினேறியடியுறவுறத்திசதாளான்
மீதுயரண்டமெல்லாமவிளங்கிடமிளிர்ந்தானன்றே. 86

முடிபுயமவிழிபேமுகமெலாமனந்தமாகிக்
கடிமலரிமையோர்தூவக்ககனவான்முகடுமுட்டி

நெடியவனாகிநின்றுநிலவரையதனில்வைகுங்
கொடியவர்தம்மையெல்லாமடியினான்மிதித்துக்கொன்றான். 87

வரையிடையடித்துந்தூடவுகிரினால்வகிர்ந்துங்காலாற்
றரையிடையரைத்துங்கையாற்பிசைந்துரச்சழக்கர்தம்மைத்
திரையுறுகடலுள்வீழ்த்துந்தீயிடைமடுத்துச்செற்றா
னொருநொடியிலேமுன்னமுலகெலாமளந்துகொண்டான். 88

ஆடகமலர்கடேவியமரர்கண்முனியேலென்ன
வீடுமென்றுமுதலினோர்கள்வெருவிநான்மறைகொடேத்த
நீடியமுகடுமுட்டநிமிர்ந்தவனஞ்சலில்லா
மூடனைநோக்கித்தூயமுறுவலோடியம்பலுற்றான். 89

அரவுயர்துவசனின்றோடனுசரைவதைப்பனென்று
விரைசெறிதொடைசேர்வீமனவிளம்பியசபதத்தால்யான்
றரையினில்வதைத்திடாமற்றவிர்ந்தனனென்றுசாற்றி
நிருபர்களிறைஞ்சநீண்டவடியினையடக்கினான். 90

உரககேதனனையோவியுயர்மறையோன்சேய்தன்னை
யிரவியைப்பரிவேடந்தானவளைத்தமைபார்த்தியென்னத்
தரையிடைவிடுத்தேயாழிதனையெடுத்தேகுவான்றன்
னிருகையும்பிடித்துச்சேனாபதியெனவிராதேயென்றான். 91

அந்தணன்சிறுவன்றன்னையிரவியைநோக்கென்றாழி
தந்திடுமுன்னஞ்சேனைகாவனீதவிர்கென்றேகிக்
குந்திமுன்பயந்தகன்னன்கவசகுண்டலத்தைக்கோதி
லிந்திரன்கவரமாயமியற்றினனெழிலிவண்ணன். 92

இரவிசேயுன்றன்மைந்தனென்பதுகுந்தியென்னுந்
தெரிவைதானுணர்ந்துகூறச்செங்கதிரவன்றன்சேயை
யரவினைப்பின்னும்வில்லாற்றொடுத்தருச்சுனனைக்கொல்லா
விரதமாதாத்தான்வேண்டவிராடன்மாநகரிற்சென்றான். 93

கரியினைவதைத்தோனெய்தக்கண்டைவரிறைஞ்சலோடு
மரவுயர்வேந்தன்றன்பாலணுகியைந்தூர்தான்கேட்ப
வொருமயிர்நுனிதானூன்றுமவனியுமுதவேனென்று
வரைவிலானுரைத்துச்செய்தவஞ்சமுமொழிந்தான்மாயன். 94

மயிர்நுனியூன்றுமண்ணுங்கொடேனென்றமன்னன்போரி
னுயிர்விடச்செருச்செய்தோங்குமொருகுடைக்கீழின்வைகி
யியல்புறுமவனியாளவியற்றுவனென்றேயைவர்
துயரறவுரைத்தலோடுந்தொழுதனர்பாண்டுமைந்தர். 95

வேறு.

தீதுறுமவருடன்போர்செயக்குருகசேத்திரத்தின்
மாதவனைவரோடுமெணிநெடுந்தேரினையுகி

அதிரதக்குழாங்கள்சூழவைவரோடரவுயர்த்தோ
னெதிர்பொருசமரந்தன்னிலியாவருமின்றியேமன்
வதையுறுங்கொடுமைநோக்கேனென்றுமாமதியின்வண்ணன்
விதுரனுந்தானுநீர்த்தயாத்திரைவிரும்பிப்போனார். 106

உத்தியோகப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 3198.

---

## 117 - வது, பாரதப் படலம்.

---

தூதுசென்றைந்தூர்வேண்டிவிதுரன்விற்றுணியச்செய்து
கீதையுமொழிந்துவைய்யமூர்ந்துயர்கெங்கைமைந்தன்
வேதியனங்கபூயன்மத்திரன்விடவியாள
கேதனன்மடியவைவர்க்குதவுகேசவன்றாள்வாழி. 1

அரவருண்மடந்தைமைந்தனுருப்பெலாமறுத்துத்தன்ம
னிருநிலமிசையினெய்திக்களப்பலியூட்டினானென்
றுரைசெயநயனமில்லான்சுதனுளங்கனன்றுதேர்மேற்
கரிபரியிரதஞ்சூழக்கடிதினிற்களத்துள்வந்தான். 2

மன்னவர்விறலையெல்லாமதிக்கும்வானதிதன்மைந்த
னென்னையத்தரதனாகவியம்பினானென்றுசீறிக்
கன்னனிச்சமரந்தன்னிற்கங்கைதன்மதலைவீந்த
பின்னர்யான்பொருவனென்றுபேசித்தன்மனையிற்புக்கான். 3

அங்கமனேகலோடுமெணியெலாம்வகுத்துப்பாரி
னெங்குமன்னவர்கள்சூழச்சுயோதனனிலங்கிநிற்ப
மங்குலினிடிகளஞ்சவளையொடுபேரியார்ப்ப
கங்கைதன்மைந்தனின்றான்கதிரவன்றோற்றம்போல. 4

அரவுயர்மன்னன்சேனையார்த்தெதிர்வருதலோடு
முரசுயர்வேந்தன்பேரிமுழங்கிடத்தேரினேறிக
கரிபரியிரதம்வீரர்கணக்கிலார்மிடைந்துசூழ
கிருபரெண்ணனுசரோடுமடைந்தனனெரிகொணெஞ்சன். 5

திருமகள்கொழுநனம்பொற்றேரிடைவலவனாகிப்
பரியினைநடத்தவானிலரியுறுபதாகையோங்கச
சரியில்வெண்டரளமாலைவயங்கிடச்சார்ந்தபார்த்த
னரசர்கடிசைகடோறுமவனியினிறையக்கண்டான். 6

குரவரைக்கிளைஞர்தம்மைக்குருவினையனுசர்தம்மை
வரிசையார்முன்னோர்தம்மைமைந்தரைமடியநூறி
யிருநிலமாளும்வாழ்வாற்பெறும்பயனேதென்றன்னி
வரிசிலைநிலத்தின்வீழமலர்க்கணீர்சொரியநின்றான். 7

மனமெலிந்தமரினிந்தமன்னவருடனேயென்ற
னினமெலாமடிய நூறினெனன தாமறமென்றுன்னித்
தமோ நந்திருக்கணீட்டார்கிறைந்திட சதனுவும்வீழத்
தனியுழுவிசயன ... சசுந்த ரபிருக்கிசொல்வான். 8

இருதிலமிசையினோ... ...ரியாரையும்வதைசெயனென்றே
யுருஞ்யமன தநுக்குடனொந்திடவ்சயாமீசணீ
தரையெரிபனிலமலானுமலமெலாமயானே போரி
னரசராயெதிர்வோனயானேயவர்களைவதைப்போன்யானே. 9

அவனியாதி நுவிநீவியளந்தயில்பலனும்யானே
புபனமுண்டுமிழ்ந்துகோட்டாலிடந்துபோற்றுவனும்யானே
சிவனயன்வலாரியிந்துசெங்கதிர்முனிவர்தேவர்
பவமுறுமசுரர்வெய்யநிருதர்பார்மனிதர்யானே. 10

ஓதையாருவரியானேயோகியபிறங்கல்யானே
பாதவநிரைகள்யானேபழுவம்யான்பசுக்கள்யானே
வேதநாலுடனேயாறுசாத்திரமயானேமிகக
போதியான்மணம்யானுண்ணும்பொறிவரியளியும்யானே. 11

இபமுதலுறவிகீழாயெழுந்தபல்லுயிரும்யானே
தபனனல்லொளியும்யானேசந்திரன்குளிர்ப்பும்யானே
விபவமயான்வெறுமையானேமேகம்யானுடுவும்யானே
சுபமுமயானசுபம்யானேசுவர்க்கம்யானரகம்யானே. 12

அறனியான்மறனியானேயருப்பம்யான்பெருக்கம்யானே
யுறவும்யான்பகையுமயானேயூழியான்முயற்சியானே
விறலியானிழிவுயானேவெற்றியான்றோல்வியானே
பொறையுமயான்முனிவும்யானேபுகழ்ச்சியானிகழ்ச்சியானே. 13

உருவும்யானருவும்யானேயுறுதல்யான்பிரிதல்யானே
திருவும்யான்றவ்வையானேசெனனம்யான்மரணம்யானே
யரிவையாணுணும்யானேயலியும்யானொலியுமயானே
மருவுமயானபரிசமயானேவயங்கலயான்மயங்கல்யானே. 14

விடமும்யானமிர்தம்யானேவெளியும்யானிருளும்யானே
யடியும்யான்முடியும்யானேயரனுமயான்மூனுமயானே
நெடுமையானகுறளுமயானேகிழலுமயான்வெயிலுமயானே
கொடுமையான்குணமும்யானேகுறைவுமயானிறைவும்யானே. 15

ஆதலாலெவையுமாகியண்டமோரனந்தமென்னுட்
போதயானதனின்வைகிப்புவனமேவிடர்களசெய்யு
மேதலார்திரள்கள்வீயயானிருந்தியற்றலாலே
காதியகளத்திற்கொல்லைகணேகளால்விசையவென்றான். 16

விசயநீயானேயுன்றன்வில்லியான்விசிகம்யானே
கசியுறுகதமும்யானேதணியுமொன்னலரென்சேட்டை

வசையுனக்கெங்ஙனெய்தும்வருந்தனீயென்றுமாய
னிசைவுறவிளம்பித்தன்பேருருவம்வானிலங்கநின்றான். 17

புயல்வணன்சிரங்களெண்ணில்பொன்முடிதுலங்கக்கண்டான்
கையினுயர்திகிரிசங்குசணிப்பரும்வளைப்பைக்கண்டான
மெயினுறுசலன்களகோடியிரவிபோல்விளங்கக்கண்டான்
மயிர்நுனிதோறுமண்டம்வயங்கியமாட்சிகண்டான. 18

இருசுடருடுவான்மேகமெண்டிசைப்பாலர்வேலை
வரைசிவன்முனிவர்வேதனிருதர்தானவர்கள்வானோர்
தரையுறுமனிதர்பல்வேறுயிர்சராசரங்களெல்லா
மொருதனியண்டந்தோறுமுறுவனவெல்லாங்கண்டான். 19

அண்டங்கடோறுந்தேர்மேலரியொடுதனனைக்கண்டான்
மண்டனில்வயங்குகின்றமன்னரோடனீகங்கண்டா
னெண்டவத்தோர்க்குமெய்தாவிறைவன்றனுருவங்கண்டு
விண்டனவினையென்றன்னியிறைஞ்சியேவிளம்பலுற்றான. 20

உலகினைப்படைத்துக்காத்தேயழித்தொருமுதலாயோங்கி
நிலவுடைமுதல்வாபோற்றிநேமிசேர்கரத்தாயபோற்றி
யிலகியதிருவாழ்மார்பாபோற்றியென்றேர்மேலவைகும்
வலவனேபோற்றியென்றுமகிழ்ந்தெழுந்தாடினானல். 21

இறைவநீயியற்றியெல்லாக்கருமமும்முடிக்குஞ்செய்கை
யறிவிலாதியானேசெய்வனென்றுயராங்காரந்தான்
குறைவிலாதெழுந்துதோன்றுங்கொடுமையையகற்றினாயென்
றறுழ்வலிக்கரங்கள்கூப்பியிறைஞ்சினின்றேத்தினானல. 22

அல்விறவெழுந்துதோன்றுமலரிபோல்விசயன்முன்னர்ச
செல்லெனவொளிருமேனிதிசையெலாம்விளங்கநின்றே
மல்லவைரவதைத்தகோமானவலவனுயிரத்மூர
வில்லினையெடுத்துப்பார்த்தனவிசிகமாமழைபெயதார்த்தான். 23

இந்திரனசிறுவன்விட்டவிசிகமெண்டிசையும்போர்ப்ப
வந்தணைவன்சேயமந்தாகினிசுதனரசரோடு
துந்துமிமுழுங்கநதுகறங்கிடத்துரங்கம்பொற்றேர்
தந்திகணமிடைந்தேதாககசசாயகஞ்சொரிந்தார்த்தாரால். 24

வாயுவினமதலையோடேவாளரவுயர்த்தோனாகி
யேயெனுமுன்னம்வில்லோடிரதமுந்துணியப்பாற
தூயமத்திரைகான்பெற்றசுதன்றனகிளையோனமபாற்
றீயவெஞ்சகுனியோடதேர்சிலையறுத்தங்கார்த்தான். 25

வசிலாவபிமன்றேடேயிலக்கணகுமரனாகி
வாசவனிமையோரெல்லாமதித்திடச்சமரஞ்செய்தா
ராசைகடோறும்விஞ்சுமதிரதாபொருதுமண்மேல்
நாசமுற்றிடச்செஞ்சோரிநதியெனவோடிற்றன்றே. 26

மத்திரவரசன்றேர்மாமறைந்திடவரிவிலாலே
யத்திரமாரிதூவியசனியுமஞ்சவார்த்த
வுத்தரன்றன்னையனலியுமிழ்வுறுவாளிதன்னாற்
சித்திரவதஞ்செய்தார்த்தான்சீருறுநகுலன்மாமன். 27

தூயமாவிராடன்மைந்தன் மடிந்திடச்சுவேதன்சீறிப்
பாயுமாவிரதந்தூண்டிப்பல்லவமாரிபெய்து
தீயமேபோலவெய்யசினத்தின்மத்திரர்கோன்மார்பி
னாயிரங்கடியவாளியழுத்திடப்பாறினால். 28

வீடுமன்சகுனிதுய்யவேதியன்விடசேனன்றன்
கோடகத்தாமாபூரிசிராவிவர்கொதித்துவந்து
பீடுடைச்சுவேதனம்பாற்பெறுவிறலழிந்தேயோட
வீடியபிணத்தின்குப்பைவிலங்கல்போலுயர்ந்ததன்றே. 29

நிலைகுலைந்தெழில்கொள்கங்காசுதனிலத்தோடநேரின்
மலைமகள்கொழுநனீந்தவரத்தினாற்சுவேதமன்னன்
சிலைகரதிருக்கதோலானென்றசரீரிசெப்ப
விலகியவிரதமீதினெதிர்த்துவந்தினையசொல்வான். 30

வானுறுகதிர்போற்றுய்யவாண்மழுக்கதைவிட்டார்த்துச்
சானவிபுதல்வன்மசசன்றனயனைநகைத்துநோக்கி
யூனமில்சிலையின்கல்வியன்றிவேறொன்றுங்கல்லா
வீனனீயெனவேவில்லையெறிந்துவாளெடுத்துவந்தான். 31

வாளினைச்சுழற்றிதேரினிழிந்துமாமுழையைவிட்ட
கோளரிபோலவார்த்துக்குறுகியசுவேதன்றன்னை
நீளியபகழியாலங்கதப்புயனிலதனின்வீழ்த்தி
மீளவுமவன்றன்சென்னியறுத்துவீடுமனார்த்தான். 32

சூரனாஞ்சுவேதன்சென்னிதுணித்தவீடுமனைநோக்கி
வீரியவரசரோடுஞ்சுயோதனன்மகிழ்மிக்க
வாரியிற்பருதியேகிமறைதலுமன்னரெல்லா
நேரிலாப்பாடிவீடுநிறைந்திடவிருந்தாரன்றே. 33

இரவிவந்துதயமாகவிரண்டதாந்தினத்திற்றன்மன்
பரிவொடுதுரோபதன்றன்பயந்திடுகுமரன்றன்னைக்
கரிபரியிரதங்காலாளணிகக்காவலன்றனாக்கி
விரைவினிற்சமரபூமிமிடைந்துவந்தார்த்தாரன்றே. 34

விடவரவுயர்த்தகோமான்வீடுமன்முதலாம்வீரர்
கடகரியிரதம்வீரர்கணக்கிலாருடனேதாக்க
முடியுறுசிரங்கள்வானின்முகடுறக்கவந்தமாடப்
படியினிற்குருதிவெள்ளம்பரந்திடப்பொருதாரன்றே. 35

அதிரதவீரர்தாக்கியகணைசொரிந்துவந்தே
கதமுறுமிபமாவீழக்கடுஞ்சமர்செய்யுங்காலை

மதியொளிதிகழவெய்யோன்மறைதலுமன்னரெல்லா
முதியுள்வாங்குஞ்செய்கையொத்துத்தம்மிருக்கையுற்றார். 36

ஆன்றபேருலகுக்கெல்லாமவிரினையருளும்வெய்யோன்
றோன்றிடத்துரகங்கைமாசுரர்கண்மிடைந்துசூழ
மூன்றதாந்தினத்தின்வெய்யமுடங்குளைக்குற்றசீற்றம்
போன்றுமாமன்னரெல்லாம்பொறியுறுகணைபெய்தார்த்தார். 37

கங்கைமாதருளுமைந்தன்கடையுகவிறுதிகால
மங்கைபங்காளன்போலமுனிந்துமாவாளிதூவச்
சிங்ககேதனன்மாவல்லோனசினிசுதனேர்விலின்றிச்
செங்கண்மால்விசயன்காணவிரிந்தனர்திசைகடோறும். 38

தாலகேதனன்றன்வில்லால்விடுத்தசாயகங்களெங்கு
மாலமாவிடமேபோலவரித்திடவரசரெல்லா
ஞாலமேன்மடியவெண்ணில்கவந்தங்கணடிக்கவோங்கும்
வேலைபோலருணநீர்பார்பரந்தவெள்ளிடையுமின்றி. 39

வாரியைச்சுவறவாங்கும்வடவனலென்னவாளி
யேருறுங்கங்கைமைந்தன்பொழிந்திடவெதிர்நிலாமல்
வீரியர்மடியநோக்கிவிசயன்றான்றடுக்கநில்லா
தாரியன்முனிந்துதுய்யவாழியைசசுழற்றிச்சென்றான். 40

ஆடகன்றன்னைச்செற்றானாழியைக்கரத்திலேந்தி
மோடுடைக்கனமேபோலமுடுகியேநிலத்தினெய்த
வீடுமனோக்கிச்சிந்தைவெருவநாக்குழறவந்து
வாடியமனத்தனாகிவணங்கிநின்றிவைகள்சொல்வான். 41

இரணியனவன்றன்பின்னோனிராவணன்கும்பகர்னன்
முரனுறுநரகன்கஞ்சன்மூரனுறுசேதிபன்றான்
றரணியின்மடிந்துவீழத்தாக்கியசோதியென்றின்
கிரணநேராழியேந்திக்கிளர்ந்ததென்மொழிநீயென்றான். 42

மீளியாய்க்கனகன்றன்னைவதைத்திடுமவிமலனேயுன்
றாளினையேத்திவாழுஞ்சமனிலாவடியார்பாதத்
தூளியாயதிரியுமென்மேற்சுடருறுதிகிரியேந்தி
மூளும்வெஞ்சினத்தனாகிவந்ததென்மொழிதியென்றான். 43

செருவினிற்றிகிரியாயனெடுக்கயான்சமர்செய்வேனென்
றுரககேதனன்முன்னோதுமடியனெனுரைபொய்செய்யாக்
கரமிசையாழியேந்திககமலங்கொளெழில்போலத்
தரைமிசைநடந்துவந்ததயாபரவென்றுசொல்வான். 44

நீயவனாகிவைதசேதிபனுயிரானசோதி
மாயவுன்னடியினெய்தமற்றவன்சிரத்தைத்தன்னுந்
தூயவிவ்வாழியென்னைத்துணித்திடவிடுகென்றே
யோய்விலாத்துதிசெய்நாவனுரைத்தடிவணங்கினானால். 45

வீமென் வணங்கியேத்தவிமலன்வெண்முறுவல்செய்து
கோடகம்வயங்குந்தேரிற்குறுகலும்விசயன்மாயன்
மோடுடைத்திகிரிதொட்டதனைமுனிந்திகழ்வாரென்றே
நீடியசரங்கள்வானினிறைந்திடத்தூவியார்த்தான் 46

பாவையெண்டிசைகளெல்லாம்பரந்திவொளிதன்று
னுரகேதனன்றன்சேனைமடிந்துயர்வேந்தரெல்லா
மிரிதலுமிரவியேமறைந்திடவிருபாலுள்ள
வரசர்களணிகத்தோடும்பாடிவீடணுகினாரால். 47

மேலவன்குணபாற்றிக்கினிலங்கியேயுதயஞ்செய்ய
காலதாதினத்தின்வேந்தர்நண்ணிவெங்கணைபெய்தார்த்துச்
சூலம்வாணமுசுண்டியீட்டிதோமரங்குந்தம்வீசி
யாலமாவிடமேபோலவடலபொருதவிந்தாரன்றே. 48

குருதிமாந்திபோலோடக்கோடகம்வயங்குதேர்மேற்
பொருதும்வீரியர்கண்மாளப்புகரியமடிந்துவீழ
விருதுறுமரசரெல்லாம்வெஞ்சமர்விளைக்கும்வேலை
பருதிபோய்மறைதலோடும்பாடிவீடணுகினாரால். 49

விஞ்சியகுணபால்வேலைவெய்யவனுதயமாக
வஞ்சதாந்தினத்திற்பேரியறைந்திடவரசரெல்லாங்
குஞ்சரங்கொடிகொடேர்கள்கோடகமடிந்துவீழ
வெஞ்சரம்பொழிந்துவானோர்வெருவிடவார்த்தாரன்றே. 50

கரியுரிபோர்த்தோன்போலக்கனன்றுயர்வீமன்றண்டா
ணிருபர்கண்மடிந்துவீழநிலத்திடையறைத்துத்தூய
பரியினைப்பதத்தாலெற்றிப்பன்மணித்தேரைவீசி
யரவுயர்வேந்தன்பின்னோரைவரைவதைத்தேயார்த்தான். 51

அனுசர்கண்மடிந்துவீழவரவுயர்துவசவேந்தன்
மனமெலிந்திரங்கிக்கங்கைமைந்தன்றனடியின்வீழ்ந்தே
யுனையுறுதுணையாயுள்ளோனிடர்க்கடலுறவோவென்று
துனியுறுமவனைநோக்கிபிதாமகன்சொல்லலுற்றான். 52

மன்னவகேட்டிபாண்டுமைந்தர்கள்விறலையெல்லா
முன்னம்யானமொழியக்கேளாய்மூன்றெழுமரிலுன்றன்
பின்னவர்போலயாமுமடிவுறாபின்னீயாண்டி
கன்னனுஞ்சகுனிதானுங்கழறிடமகிழ்வாயென்றான். 53

உரகேதனனுக்கிவ்வாறுரைத்துயர்வீடுமன்றான்
வரிசிலைவளையவாங்கிவாயுவின்மைந்தன்மீதிற்
கருமுகில்பொழிந்தாற்போலக்கடுங்கணைசொரிதலோடு
மெரிசகாசுதனூறமபாலறுத்தனனிமைப்பின்முன்னம். 54

வெந்திறற்கங்கைமைந்தன்பின்னரும்விசிசந்தாவ
விந்திரன்மைந்தன்வீமனிவுளியைநடந்தவல்லோன்

சிந்தியபகழியாலேதேருயர்துவசம்வீழ
முந்திமூதாதைவில்லுமுறிந்திடப்பாறினானால். 55

வரிசிலைப்பார்த்தன்வீமனமாவலோன்சாதேவன்ற
னாருமெனவிருந்தேரினூற்றுமாவாளிபெய்ய
வரசர்கண்மடியப்பேய்களாடவேகுருதியோட
விரவிபோய்க்குடபாலேகப்பாடிவீடெய்தினாரால். 56

ஆதவனுதஞ்செய்யவாறதாந்தினத்தின்வெய்ய
போதகமிரதமெண்ணில்புரவிகணெருங்கவீர
ரோதையாருவரிபோலவார்த்துயரும்பரிம்பர்
மாதிரமறையவில்லால்வாளிமாமழைபெய்தார்த்தார். 57

விசயனுசுகன்றன்மைந்தனவிறல்செறிகடோற்கசன்றான்
வசுவரிபோல்வில்வாளிபொழிந்திடவயலர்மாண்டு
தசையுறுகுருதியண்ணிற்றரங்கமார்ந்திம்பாலோட
கிசியுறவிரவிவீழவிருபரில்லடைந்தாரன்றே. 8

இரவியுங்குணபால்வேலையிலங்கவேயேழாநாளின்
முரசொலிகறங்கப்பேரிமுழங்கிடவரசரெல்லாம்
பொருகரிபரிகள்சூழப்புணரிபோலனிகமார்ப்ப
விரைவினிற்களத்தினெய்திவெஞ்சமர்விளைத்தாரன்றே 59

மிடலுடையரசரெண்ணில்விசிகத்தாற்பரிகள்வீழப்
புடவியிற்புகரிபங்கள்பொருப்பெனவிழவேநூறிக்
கடலெனக்குருதியோடக்கவந்தங்களாடவெய்யோன்
குடகடலடையப்பாடிவீட்டினிற்குறுகினாரால். 60

என்றுயர்குணபால்வேலையிலங்கிடவெட்டாநாளின்
வென்றிகொளரசரெல்லாம்வெஞ்சமர்விளைத்துவிஞ்சு
குன்றெனப்பூழ்க்கைவீழகுராசருளவீரர்
பொன்றிடக்கணைகண்மாரிபுயலெனப்பொழிந்தாரன்றே. 61

அரவருண்மடந்தைமைந்தனமரினிலனந்தமான
வுருவமாய்த்தீயாயக்காற்றுயும்பருந்தங்கமோதிக்
கரியினமிவுளியீட்டங்கனகமாததேரின்வீரர்
புரவலர்மடியக்காலன்போலவேயமர்செய்வேலை. 62

நகபதிபொருவுமெய்யனலமிலாதிருதர்கோமான்
சிகப[illegible]யென[illegible]வெவெய்யசினத்தினலம்புதன்றன்
[illegible]கப[illegible]யுருவமா[illegible]ககனமீதெழுந்துவந்தே
[illegible]மகப[illegible]சுதன்[illegible]செய்[illegible]ன்னைவாளினாற்றுணித்துவீழ்த்தான். 63

[illegible]ண்மடந்தைமைந்தன்மடிதலும்வெகுண்டுமோது
[illegible]ன்றுயயவபிமனுங்கடோற்கசன்றான்
[illegible]சயனுஞ்சிலீமுகமாரிபெய்ய
[illegible]றுமிபமாமாளவிந்தனரரசரெல்லாம். 64

கதங்கொளுநிருபர்மாளக்கவினுறுமணியினாலே
விதங்கொளுமிரதம்வீழவிலங்கல்போலிவுளிசாய
மதங்கொளுமிபங்கண்மாயமன்னவர்வெருவியோடப்
பதங்கன்வாரியினின்மூழ்கப்பாடிவீடணுகினாரால்.

பன்னகத்துவசவேந்தன்பாடிவீடணுகியாங்கே
யொன்னலர்விறலையெல்லாமுன்னியங்குவமையில்லாக்
கன்னனையழைத்துநீயுனகணைகளாமாரிபெய்தே
யென்னிடர்களைந்தைவோர்தஞ்சிரத்தினைத்துணித்தியென்றான்

ஈனமுற்றிராசராசனியம்பிடக்கன்னன்சொல்வான்
சானவிதனயனென்னைச்சமரிலத்தரதனென்ற
ஆனமதொழியப்புல்வாயுற்றிடக்கவ்வுவானே
னானமர்பொருதுவென்றுநானெனக்களிப்பனென்றான்.

அங்கர்மன்கூறக்கேட்டேவறிவிலாவரவுயர்த்தோன்
வெங்கணனானதுச்சாதனனைநீவிரைவினெய்திக்
கங்கைதன்மைந்தனோடுகன்னனொன்னலரைவெல்லப்
பொங்குவெஞ்சமரினாளைப்புற்கவ்வச்சொல்லுகென்றான்.

முன்னவனுரைப்பக்கேட்டுமுறைமையில்பின்னோன்சென்றே
யின்னலில்காங்கயன்றன்னிணையடியிறைஞ்சிநின்று
கன்னனொன்னலரைவெல்லநாளைப்புற்கவ்வுவாயென்
றுன்னைமன்சொன்னானென்னப்பிதாமகனுரைக்கலுற்றான்.

மன்னவற்கிளையோய்கேட்டிவாசவன்மைந்தனாலே
யின்னிலமதனினாளைக்கழியயானிறந்தபின்னர்க்
கன்னனொன்னலர்கண்மாளக்கடுஞ்சமர்பொருதுவென்றே
யன்னவனோடுங்கூடியாளுமின்னரசையென்றான்.

மறவிலாக்கங்கைமைந்தன்கூறியவசனமெல்லா
மறனுறுகயவனேகியரவுயர்த்தோனுக்கோத
நெறியுறுமன்னன்கன்னன்றன்னோடுநெடிதுநேர
மூறவனகருமமோதிச்சேக்கையினுறங்கினானால்.

உததியினெரிதோன்றவொன்பதாந்தினத்தின்வெய்ய
வதிரதர்மிடைந்துசுற்றவறன்சுதனெய்தவானி
னதிசுதனணிகமாப்பநாகமார்துவசனோங்
கதுமெனவடர்ந்துவில்லாற்கனமெனக்கணைகள்பெய்தான்.

சானவியருளுமைந்தன்விடுத்தசாயகங்களெல்...
வானவர்பதிதன்மைந்தன்வாளியாலறுத்துமாற்ற...
சோனைபெய்வதுபோலெங்குஞ்சுடர்முகப்பகழிதூவச்
சேனைகண்மடியவெய்யோன்மறையத்தம்மிருக்கை...

தினகரனுதயமாகத்தசமதாந்தினத்திற்றுய்ய
[illegible]

துனிகளைந்தனங்கனம்பாற் றுவக்கிலான் றுவசமீதிற்
பனைகவினுறவேதேர்மேற்பரிதிபோனின்றான்மாதோ. 74

முரசுயர்வேந்தன்பின்னோரணிகமுமொய்ப்பவேகி
யரவுயரரசன்சேனைதன்னுடனமர்செய்வேலை
வரிசிலைப்பார்த்தன்மந்தாகினியருண்மைந்தனோடு
சுரர்துதிசெயயவெம்போர்தொடங்கிமாவாளிபெய்தான். 75

விசயனெய்விசிகந்தன்னைவீடுமன்கணையான்மாற்றிச
சுசியுறுவாளிமேகம்பொழிவபோற்சொரிந்துவெய்ய
வசுவரிசகாத்தன்மைந்தன்மாவலோன்வெருவியோடச்
சசியுறுசடையன்போலத்தானையைசெற்றானன்றே. 76

உருத்தெழுமுருத்திரன்போலுயர்திரிபதைபெற்ற
விருத்தனெய்விசிகந்தன்னால்வீடியமணரைநோக்கி
வருத்தமோடணைவனென்றமாதுருத்தவிர்ந்துவந்த
கிருதிமசிகண்டிதன்னைக்கேசவன்பொருதியென்றான். 77

மாதவனருடலோடுமறனுறுசிகண்டியெய்ய
நீதிசேர்கங்கைமைந்தனிராயுதனாகிநிற்ப
வேதமில்விசயன்விலலாலிமைபபினமுன்னெண்ணில்கோடி
யாதவனவிரைமானுமாசுகமழுந்தவெய்தான். 78

மாகவானருளுமைந்தன்வாளிதன்னுரங்கைகாலோ
டாகமுட்டுளையாயேகவாவிதன்னுடலையோவி
யேகுமுன்றடுத்துத்துய்யவிரவிபோய்மகரம்பற்றப்
போகுதியென்றுள்வைததுவீடுமன்புவியிற்சாய்ந்தான். 79

ஆதியைக்கருத்துள்வைத்தேயாசுகவணையினமீதின்
பூதலமிசையிற்சாய்ந்தபகீரதிபுதல்வனபாசச
தேதமிலவரோடுஞ்சுயோதனனிரங்கிவீழந்த
தீதகல்காங்கயன்றான்றேறியேசெப்பலுற்றான். 80

விதியினையாவராலும்வெல்லலாம்வகைவேறில்லை
மதியிலார்போலநீயிர்வாடுமதிழுக்கென்றோதி
யதுகுலநாதன்றன்னையிறைஞ்சியேயடியேனுக்குன்
பதமருளென்றுகையாற்றொழுதனன்பவங்கடீர்ந்தான். 81

உரககேதனனைநோக்கிப்பிதாமகனுரைப்பானென்றன்
சிரமிகத்தாழ்கையாலேசிறந்ததோரணையுந்தந்து
பருகநீர்தருதியென்னப்பஞ்சின்மெல்லணையுந்துய்ய
விரைசெறியமுமீயநகைததிவைவிளம்பலுற்றான். 82

படுகளத்தியல்பலாதபஞ்சின்மெல்லணையோடிந்நீர்
விடலுடையரசநீதல்விழுமியதன்றென்றோதி
வடிவுடைவிசயன்றன்னைவழங்கெனவாளிமூன்று
தொடையினைநெகிழ்க்கக்கங்கைசுதன்சென்னிசுமந்ததன்றே. 83

சிரசினையெடுக்கமுன் றுசிலீமுகம்விடுத்துப்பார்த்தன்
றரையினையுருவவேயோர்சாயகம்விடலுமந்தப்
புரையினுளயத்தின் றுரைபொஙகிடக்கஙகைமைநதன்
பருகவவ்வழியினீரையடைநதனன்பகழியொன் றால். 84

சாயகவணையுநீருந்தநதிடுவோனை நோக்கித்
தூயளாஙகஙகைமாதின் சுதன் மகிழ்நதினிமைகூறத
தீமையில்சகாதேவன றுன்சிலையுறுசாஙகளாலே
யேயெனுமுன்னஙகூடமிலஙகிடவமைத்தானன்றே. 85

கன்னன் வநதிறைஞ்சலோடுஙகஙகைதன் மைநதன் சொல்வா
னின்னிலமதனின் மிக்கவதிரதனீயேயாவன்
பின்னைதன்மணுளன்செய்யும்போர்க்கொணுமாயததாலே
யுன்னையததாதனென் றிஙகோதினேனென் றுசொல்வான். 86

பன்னகதுவசன் றன்னைப்பகிரதிமைந்தனோக்கிக்
கன்னனையுன் றன்சேனாபதியெனப்பட்டங்கட்டி
யுன்னியகருமஞ்செய்திபோதியென் றுரைத்தலோடு
மின்னலார்மனத்தன்பாடிவீட்டினிலெய்தினால். 87

தருமனையனுசரோடுநதமுவியுன் றடக்கைதன்னாற்
பரகதியடையும்வண்ணம்பயநதிலமளிததியென்றே
யுரைசெய்தஙகவரையேவியுலகளநதவனைநோக்கிச்
சருவினிற்புகாமலென்னைக்காததருண்முதல்வவென்றான். 88

வீடுமனுரையைகேளாவெய்யவனமகரமுற்றுற்
பீடுடைசகதியையீவனென றரிபேசவென்று
நீடியகடலினமூழ்கநெடுநதவமெய்தலோடுந
தோடுடைகஙகைமைநதனருள்வழிப்புராணஙகேட்டான். 89

வாரியினலரிகீழ்பால்வயஙகிடப்பதினோராநாட்
பாரினெண்டுரோணன்சேனாதிபதியெனவயஙகிததோன்றப்
பேரிமாமுரசமார்ப்பப்பெருஙகடற்சேனைசூழ
வீரியவரசரெல்லாம்வெஞ்சமர்விளைத்தாரனறே. 90

ஆசறவிலஙகுகின் றவபிமனததிரததினாலே
யாசுணதுவசன்மைநதன் வயஙகுதேரழியவோட்டி
வேசுறுமவனைப்பரறியிருகரம்பிணிததலோடு
மாசின்மததிரதசார்சோமான்வடவைபோன் முனிந்துவந்தான். 91

வடிவுடையபிமன்மேலேவநதமததிரததார்கோனைக்
கடுவிடமெனவேசீறிககாலின்மாமதலையெய்தி
மிடலுடையிரததண்டால்விலஙகன்மேலிடிவீழ்ந்தென்ன
முடிமணிசிதறிவீழமோதியஙகாததானன்றே.

காலின் மாமதலையெற்றுஙகதையினமததிரததார்கோமான்
கோலமார்முடியினமிக்கசெழுமணிசிதறிவீழ

ஞாலமேல்வானினோங்குநகம்வீழ்ந்தெனவேசாய்ந்து
சீலமார்குணத்தான்பின்னர்த்தெளிவுறப்பாறினானால். 93

மாயவன்மருகனென்னோடெதிர்ந்தமத்திரத்தார்கோனை
யேயெனுமுன்னமயானேசெயிக்குமுன்னெதிர்ந்துவென்றாய்
போயதென்விறலின்றென்றுவீமற்கும்புகலுமவேலை
தூய்மையில்சுயோதனன்றன்சுதனிலனோடினானால் 94

காமுறுபாசத்தோடிலக்கணன்கலங்கியோட
விரைவினிலிவுளித்தாமாமேவித்தன்றேரிலேற்றச்
சுரர்பதிசுதன்வில்லாலேசுடுகணைசொரிதலோடு
மரசர்கள்வெருவியோடவருக்கனுழ்கலியினாழ்ந்தான். 95

கடலிடையலரிவீழக்கட்செவியுயர்த்தகோமான்
படியினில்வயங்குகின்றபாடிவீடதனின்மேவி
யிடலுடையபிமனெய்தியிலக்கணன்றனைவீக்க
விடையினிற்றடுக்கலாதீரிற்றநும்வீரமென்றான். 96

இந்திரன்சுதன்றன்மைந்தனிலக்கணன்றனைவீக்கு
நிந்தனையொழியநாளைத்தருமனைநீங்கள்பற்றித
தந்திடில்வென்றியாமென்றரவுயர்வேந்தன்சாற்ற
வந்தணனதனைக்கேளாவிம்மொழியறையலுற்றான். 97

வெறிமலர்த்துளவனோடுவிசயனைச்சமரபூமி
பிறியவேயறையைக்கூவிப்போர்க்குமவீரியருளாரேன்
மறனுறுதருமன்றன்னைப்பற்றுவனெனனும்வாய்மை
யறைதலுமந்தன்மைந்தனரசர்வல்லீரோவென்றான. 98

வேறு.

துரியோதனனிவைகூறிடததுவராபதியாள்வோ
னருள்வீரருந்திரிகர்த்தருமமிதாசனர்க்கிறையோன்
றருசூரனையாமேயறைகூவித்தனிசெய்தே
பொருவோமிதுசரதம்மெனசசபதம்பலபுகன்றார். 99

அரிமைந்தருந்திரிகர்ததருஞ்சபதம்பலவறையப்
பெரிதின்பமோடரவக்கொடிப்பெரியோனுளமகிழாத
தரளம்முயர்சசிபோலொளிதருதாவடநல்கி
யிருள்விஞ்சிடத்தத்தம்மிடமெய்தித்துயின்றனரால். 100

இரைவேலையின்மார்த்தாண்டனங்கெழவீறுதினத்திற்
றிருமாலருள்புதல்வோருடன்றிருகத்தருமேகிப்
பொரவாவிசயாவென்றறைகூவப்புயலெனவே
யரிகோல்கொளுமிரதத்தருச்சுனன்போயினனவர்மேல். 101

அரிதன்னுடன்விசயன்பொரவறைகூறுமன்னவர்பால்
விரைவின்னுறவனிலன்மகன்விறல்விஞ்சியநகுலன்

றருமன்னொடுசகதேவன்வெம்பரிதந்திகணிறைய
வரிவெஞ்சிலைவிளைத்தாசுகமழைபோலுறப்பொழிந்தார். 102

கறைதங்கியகிரிவன்னெனக்கன்னன்கணைபொழிய
மறைதங்கியநரவன்மழைபோல்வாளிகள்சொரிய
வெஃறிதங்கியதொடைமார்பினனவீமன்முதனிருபர்
நெறிதங்கியதருமன்முனர்நில்லாதிரிந்தனரால். 103

அரிவந்திடவெருவுங்கரியினமாமெனமரசர்
தரையின்கணினிடைந்தோடிடத்தருமன்னகைசெய்தே
வரிவெஞ்சிலைசிறநாணொலிவானெண்டிசைமடுப்பச்
சொரியுங்கனநிகராமெனச்சுடர்வாளிகள்சொரிந்தான். 104

சுரர்தன்பதியளவாயுயர்முரசக்கொடிதுலங்கத்
தருமன்னெழிற்றேர்மேலொளிர்தபனன்னெனத்திரிந்தே
விரைவிற்கணைசொரிந்தாத்திடவிறன்மன்னர்கண்மடிந்தார்
கரியிற்றனபரியற்றனகவந்தங்கடிதாட. 105

மின்னிப்பொழிமழையாமெனத்தருமன்விடுகணையாற்
பொன்னிற்பொலியிரதஞ்சிலைகவசம்பொடியாகக்
கன்னன்பரித்தாமாவுடனிருகண்ணிலிமைந்தன்
வென்னிட்டனர்மறையோன்விசையோடுநிலனேட. 106

அரவத்துவசன்வேதியனருக்கன்மகன்முதலா
நிருபத்திரளிடைந்தோடிடநெறியிற்பகதத்தன்
வரையொத்தடர்கரிசுப்பிரதீபத்தினின்வந்தே
யெரியொத்திடுசுடர்வாளிகளெங்குமபொழிந்தார்த்தான். 107

மதமுற்றிடுகரிசுப்பிரதீபமவரையெனமண்
புதைவுற்றிடநடந்தேவிழிபொறியுற்றிடவடர
மிதிபட்டிடனெரிந்தார்பலர்விபுலைக்கணின்மிடைந்தே
யுதைபட்டிடவுருண்டாரபலருங்கால்கரமொடிந்தே. 108

கூற்றம்மெனக்கொலைசெயதிடுங்கொடிதாகியவிபத்தை
யேற்றின்னுறுமரன்போன்முனிந்திடும்பாசுரன்மருகன்
காற்றொத்திடுமெவிசையாமபதினாயிரங்கரியாய்ச
சீற்றமுறப்பலகோடுகளுறக்குத்தினன்றிறலால். 109

பொய்யானைகளாய்மாருதிபுதல்வனுறக்குத்த
மெய்யூறியகுருதிப்புனல்விழவுஞ்சலியாம்தார்
கையாற்கொலைசெய்யுங்கரிமீதிற்பகதத்த
னையானனெனவேமுனிந்தழல்வாளிகள்பொழிந்தான். 110

நரகன்சுதன்கணையாலடர்நாகந்தொளிர்மருப்பா
லரியுற்றிடுமுலர்காடெனவறத்தின்மகனணிகந்
தரையின்மடிந்திடும்வேலையினெதிர்த்தோர்களைத்தடிந்தே
விரைவினுயர்காண்டீபமன்விமலன்னொடும்வந்தான். 111

சூரர்தம்பதிசுதனெய்திடச்சுடுதீயென முனியா
நரகன்சுதன்விடுநாரணன்படையெண்டிசைநடுங்க
வருவெம்மையையறிந்தேயரிமார்பின்னிடையேற்பத்
தரளம்மொளிர்வடமாயுரமீதிற்றயங்கியதே. 112

நரகன்சுதன்விடும்வெம்படைநாராயணன்மார்பிற்
றரளம்மொளிர்வடமாயிடத்தவத்தோர்மலர்சொரிந்தார்
பொருவெஞ்சிலைவளைத்திந்திரன்புதல்வன்கணைவிடவே
கரிபட்டிடப்பகதத்தமன்மடிந்தான்கனவரைபோல். 113

வேறு.

இந்திரன்சுதனம்பாலேயெதிரிலாப்பகதத்தன்றான்
றந்தியினுடனேமாளத்தபனன்போய்மறைதலோடுஞ்
சிந்தையிற்றுயரமெய்திசுயோதனனிருக்கைசேர
வந்தணன்றன்னைநோக்கியங்கர்கோனறையலுற்றான். 114

இன்றுநீதருமன்றன்னைப்பிணிப்பனென்றியம்புஞ்சொற்கள்
குன்றிடநெஞ்சிற்பீதிகொண்டிவண்பெயர்ந்ததன்மை
நன்றெனநகைத்தலோடுநான்மறையுணருநாவோ
னான்றியசினத்தனாகியிரவிசேய்க்குரைப்பதானான். 115

இருநிலமிசையின்வாளினெண்டிசையதனின்விஞ்சுந்
தருமன்வில்விறலுக்கொத்தாருளரெனிற்சாற்றுவாய்நீ
செருவிடையவன்றன்முன்னஞ்சிறிதுபோதாற்றுகில்லா
யுரைவலனென்றுசொன்னாலுறும்பயனில்லையென்றான். 116

இருபிறப்பாளனிவ்வாறுரைத்துத்தன்னிருக்கைசேர
வரவுயர்வேந்தன்மன்னரனைவர்க்குமவிடையையீந்து
தெரிமலர்ச்சேக்கைமீதிற்றுயின்றனன்சிறப்பான்மிக்க
தருமன்றன்பாடிவீட்டிற்றானையோடமர்ந்தானன்றே. 117

பருதிநீள்பரவைமீதின்வயங்கிடப்பதின்மூன்றாநாள்
விருதுறவறையிற்கூவும்வேந்தர்மேல்விசயனேகச்
சுருதிநூல்வல்லோனேகித்தொலைவிலாவணிகள்சூழ
வருதுணியகலவாழிப்பேரணிவகுத்தானன்றே. 118

சமீரணன்சிறுவன்றன்னைச்சாத்தகிப்பெயரினானைக்
கமையிலாச்சுயோதனன்றன்கனிட்டர்காலிங்கரோடு
மமர்பொரவருதிரென்றேயடர்ந்தறைகூவலோடு
முமையவள்கொழுநன்போலவுருத்தவர்சென்றாரன்றே. 119

ஆழியின்யூபந்தன்னைவகுத்தவந்தணர்தங்கோமா
னாழியினெழுந்துதோன்றுமுருத்திரமூர்த்தியொத்துப்
பாழிகொள்சிலையினாலேபல்லவமென்மேற்றூவி
வேழமாமடிந்துவீழவேந்தரைவதைத்தான்மன்னோ. 120

கறையடியிவுளிவீரர்கணக்கிலார்மடிந்துவீழப்
பிறைமுகவாளிதூவிப்பிஞ்ஞகன்போலத்தோன்று
மறையவனுடனேதாக்கிவரிசிலையறப்பாஞ்சாலன்
சிறுவன்றேரழியவோடித்தருமனைச்சேர்ந்தான்மாதோ. 121

தரையினிற்பாறிவந்ததுரோபதன்றனயன்றன்னை
வெருவலையென்றுகூறிவிழுமியதருமனுங்கே
யரிதிருமருகனனவபிமனைநோக்கிநீயே
பொருகுதிநேமியூபபொறியினையழித்தீண்டென்றான். 122

வீமன்றன்முன்னோன்கூறவவனடியிறைஞ்சிமிக்க
காமனுநாணுமெய்யிற்சவினுறுமபிமன்றேர்மேற்
சோமனைநிகர்த்தகொற்றககவிகைவான்றுலங்கவேதன்
மாமனைப்போலத்தோன்றிமாற்றலர்வெருவப்போனான். 123

சக்கரயூபம்பற்றிப்பொருகின்றதானையெல்லா
மக்கணமடிந்துவீழவதிரதர்வென்னிட்டோடத்
திகெலாமறையவொப்பிலிந்திரன்சிறுவன்செம்ம
லுக்கிரசுகணைகள்கோடிபொழிந்தனனுதிரமோட. 124

வேதியனங்கபூபன்விறலுடைமகதன்பூரி
தீதகலிவுளிததாமாசசெயித்திரதன்காந்தாரன்
பூதலததிரதமாவிற்பொடிபடத்திசைகடோறும்
பீதிகொண்டோடவெய்யபிறைமுகப்பகழிபெய்தான். 125

மாலின்மாமருகன்வாளிபொழிந்தவன்மலையும்போழ்திற்
காலினமாமதலைவெய்யசெறுநரைக்கதையான்மோதிக்
கோலமார்தருமன்முன்னிற்குறுகியாண்டிறைஞ்சிநந்தோ
பாலனைக்காலன்போனறபகைஞர்முன்விடுத்தாயென்றான். 126

தருமனோடிவையையோதிசமீரணனசிறுவன்றண்டால்
விரைவினோனலரைமோதிசசெலவிடவரவுயர்த்தோ
னுரையினாற்சிந்துநாடனொருநொடியிடைமுன்ன
ரரனருள்கொன்றைமாலையனத்தினெறிந்தானம்மா. 127

சிந்துநாடாளுமன்னன்றிரிபுராந்தகன்றன்முன்னாட்
டந்திடுகொன்றைமாலைதன்னினாலெறிதலோடும்
வந்தனைசெயதுவீமன்மைந்தனின்றிறந்தானென்றே
கந்தனார்தந்தைமாலைகடக்கலானிரங்கும்வேலை. 128

விரைவினிற்பொருதிவென்றுமீண்டவாளபிமன்றுய்ய
வரனருள்கொன்றைமாலைதன்னினாலனிலன்மைந்தன்
வருகிலாதிரங்குகின்றவாறெலாமுணர்ந்துநக்கன்
றெரியலையிகழ்தல்செயயான்செருநர்மேற்றேரைவிட்டான். 129

## வேறு.

சுரர்பதிசெய்யரிமைத்துனனருளுஞ்சுதன்வில்லா
னிருபத்திரண்மடிந்தேயிடநெடுவாளிகள்பொழியக்
குருமற்றவன்றருபுத்திரன்சொடைமிகக்கடுகென்ன
னிருபத்தொருதரந்தேர்சிலையிறவோடினரிடைந்தே. 130

துரியோதனனருளுஞ்சுதனுடனேபலகுமரர்
பரிதேர்நிறையிபமெண்ணிலவரப்பற்குனன்மைந்தன்
சரமாரியிற்பொருவீரரைத்துணித்துத்தழலம்போல்
வரைபோல்விழவரவத்துவசன்மைந்தனைவதைத்தான். 131

தரைமீதினிற்றுரியோதனன்றனயன்மடிந்திடலும்
வரைபோல்விழுந்தரற்றக்கடிதெடுதேமனர்தேறிக
கரிதேர்பரிநிறையக்கடுங்கணைமாரிகள்பொழிந்து
பொருதாருயர்விசயன்றருபுதல்வன்றனைவளைத்தே. 132

கிருபன்விறற்கனனன்பரித்தாமாகிரிநிகராயப
பொருமத்திரன்மறையோனிவாபுத்தேளிர்களஞ்ச
விரைவிற்கணைபொழிந்தாரத்தனர்விற்றேர்கொடிதுணியத்
தருமன்சுதன்றனயனமிகுசரந்தூவிடவிரிந்தார். 133

பின்னுஞ்சினமூறுமன்னர்கள்பெருந்தேர்மிசையெய்தித்
துன்றுஞ்சரஞ்சொரிந்தாரபிமன்றேர்சிலைதுணியக்
கன்னன்கணைவிடுத்தார்த்திடக்காமன்சுதனருள்சேய்
மின்னுஞ்சுடர்வாளாற்பொருவிறல்வீரரைவதைத்தான். 134

அரியாமெனச்சுடர்வாளினிலயந்தோலினைத்துணித்துப்
பொருவீரியன்மேற்பொன்மலர்புத்தேளிர்களபொழிந்தார்
விரைவோடிரதத்தேவருமறையோன்விசித்தான்
சுரர்போற்றிமொயோனமருகன்கையினைத்துணித்தான். 135

கையற்றிடக்கலங்காதுயரபிமன்களத்திடையோர்
வையந்தனிலுறுபண்டியைச்சுழற்றுவித்தெறிய
மெய்யோன்றியவரியாழியைநிகாதேவரவெருவி
யுய்யுர்படியினியிலலையென்றுடைந்தோடினர்கிருபர். 136

வெருவித்திசைதொறுமன்னவரிரிந்தோடவிமலன்
கரம்வைத்திடுதிகிரிப்படையெனவேகக்கனத்தி
னுருமொத்தொலியுறவான்வருமுயர்பண்டியைமறையோ
னிருபத்திரளனைவோரொடுநெடுவாளியிற்றுணித்தான். 137

கரத்தால்விடுமுயர்சில்லிமண்டுகொளாய்விழக்கண்டு
கிரித்தேயெழிலபிமன்கதைகொண்டேவாசிலன்பால்
வரத்தாற்பெறுமணித்தண்டினைமறனோர்செயித்திரத
னுரத்தால்விடவிசயன்மகன்சிரமோவியதுருண்டே. 138

## வேறு.

சிந்துவுக்கிறைவன்றண்டாற்சீருறுவிசயன்பெற்ற
மைந்தனொணசிரமண்வீழமடிதலும்வாயுசெம்ம
லந்தமார்தருமனோடுமொற்றிடவருக்கன்வானி
னிந்துவிஞ்சிடவேவீழயாவருமிருக்கைசேர்ந்தார். 139

விறலுறவறைகூவிகொண்டேகியவீரர்தம்மைப்
பிறைமுகப்பகழியாலேவதைத்திடப்பீதிகொண்டு
திறனழிந்தோடலோடுந்தேரின்மேல்விசயன்மீள
விறையவனபிமன்மாண்டானென்பதுதெரிந்தானன்றே. 140

விறலுறுவிசயன்மைந்தன்வீந்ததைகேட்கிலாவி
பிறியவேமாள்வனென்பதறிந்தரிசுரர்பிரானுக்
கறைதலுமாயமானமகன்றனையனலினிட்டே
மறையவனாகிவீழவருமுனர்ப்பார்த்தன்கண்டான். 141

இந்திரன்சிறுவனோக்கியெரியினில்விழுவான்றன்னை
மைந்தன்றனுடனேமாளமறையவவடாதென்றோத
வந்தணனுனகுமெய்திற்றடுப்பனென்றசனறுபோக
விந்தைதன்மணாளனோடுமேவினன்பாடிவீட்டினை. 142

பல்லியமுழக்கமின்றிப்பண்ணியாழொலியுமின்றிச
சில்லுழையிவுளிகைமாத்தெருவிடைதிரிதலின்றி
வல்லியராற்றுமோதைமலியவேபார்த்தன்கேளா
வொல்லையினடைந்தான்முன்னோர்க்கிடரென்சொலுற்றதென்றே

தேரினின்றிழிந்துகோயிற்சென்றிடும்விசயன்றன்னை
யாரியனறழுவியந்தோவபிமன்விண்ணடைந்தானென்னப்
பாரினிற்புரண்டுவிம்மிப்பதைத்திரங்கிடுவான்றன்னோ
டேருறுதருமன்பின்னோருடனெய்தியிரங்கினானால். 144

சுரர்பதிசிறுவனென்றன்சுதனுடன்மாள்வேனீயீண்
டெரியினையிடுதியென்னவிளையவன்வளர்த்ததீயின்
விரைவினினவிழுவான்றன்னாலனலிடைவிழாதோனெய்தி
நிருபநீயொழிதியென்றுநிகழ்த்திடத்தவிர்ந்தானன்றே. 145

அரற்றிடுந்தருமன்றன்னையபிமன்றானிறந்ததன்மை
யுரைதிநீயென்னப்பார்த்தனோதிடவுன்னைவேறே
பிரித்தெனைப்பிணிக்கவிட்டசக்கரயூபம்பேதித்
துருத்திரனென்னச்சென்றானென்சொலாலுன்றன்மைந்தன்.

அந்தகனெனவேசென்றவபிமனந்தகன்றன்செம்மன்
மைந்தனைக்கொன்றுமீளவருதலும்வாயுமைந்தன்
முந்தியேசலாமன்மிக்கமுக்கணான்மாலைபோட்ட
சிந்துமன்றண்டாலுன்றன்சிறுவனைவதைத்தானென்றான். 147

